பாலவிநோதினி பிரசுரம் நெ. 7.

உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

# இராமாயண - - - - இரகஸ்யம்

திரு. அ. சிவாநந்தசாகர யோகீசுவரர்

மருகரும் மாணவருமாகிய

வரகவி - திரு. அ. சுப்ரமண்ய பாரதி

இயற்றியது.

(துரைத்தனத்தார் அங்கீகரித்தது.)

நான்காம் பதிப்பு

பாலவிநோதினி ஆபீஸ்,

ராயப்பேட்டை போஸ்டு,

சென்னை.



காபி ரைட்] 1925 [விலை அணா 10.

உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

# முகவுரை.

——:(0):——

இராமாயண இரகஸ்யம் என்னும் இச்சிறு நூல், பிள்ளைகளுக்கென்றே எழுதியது. இதில் இராமாயணத்தின் நாயக நாயகிகளின் குணங்களும மற்றும் பரதன், குகன், மாருதி, விபீஷணன் ஆகிய இவர்களின் குணங்களும் விளங்க அவரவர் சரித்திரத்தைத் தனித்தனியே சிறுவர்க்கு ஏற்ற நடையில் எழுதியிருக்கிறது. இராமாயண இரகஸ்பம் என்கிற பெயரில் இரகஸ்பம் என்பது இந்த தாத்பரியம், கருத்து என்கிற பொருளில் நிற்பதல்லாமல் வேறு பெரிய இரகஸ்யத்தைக் குறித்ததல்ல. இராமன் நல்ல பிள்ளையாயும், பரதன் நல்ல தம்பியாயும், ஸீதை நல்ல மனைவியாயும், குகன் நல்ல நண்பனுயும், மாருதி நல்ல அடிமையாயும், விபூஷணன் நல்ல பக்தனுபும் விளங்கியதையே இங்கு எடுத்துக்காட்டியிருக்கின்றோம். இப்படிப்பட்ட கருத்துக்களை பிள்ளைகள் உணரத்தக்க இரகஸ்பம் என்று பெயரிட்டோம்.

இறைவன் திருவருளால் இதன் மூன்று பதிப்புகள் செலவாகி நான்காம பதிப்பு வெளி வந்திருக்கிறபடியால், இதனை வாங்கிப் பிள்ளைகளுக்கு உபயோகிப்பதில் தமிழுலகு விருப்பங் கொண்டிருக்கிறதென்பது தெரிகின்றது. ஆதலின் இதன் பயனைப்பற்றி நாம் எழுதவேண்டியதின்றும்.

இதுவரையில் இதனைத் தமது பள்ளிக்கூடங்களில் பாடமாக வைத்துப் பிள்ளைகள் நலல பயனைப்பெறுமாறு செய்து எமக்கு உபகரித்த உபாத்திமார்களின் நன்றி என்றும் மறப்பதன்று

குமாரவிலாசம்,
ராயப்பேட்டை,
4-7-1925.

இங்ஙனம்,
திரு. அ. சுப்ரமண்ய பாரதி.

## பொருளடக்கம்.

உ

செந்திலாண்டவன்
திருவடி துணை.

# இராமாயண இரகஸ்யம்

## ஸ்ரீராமச்சந்திரன்

கல்லபிள்ளை

---

## அத்தியாயம் 1.

### ஸ்ரீராமச்சந்திரனுடைய இளமையும் ஒழுக்கமும்.

நாம் வாசஞ்செய்யும் இந்தியாவிலே அயோத்தி என்னும் ஓர் அழகிய பட்டணத்தில் முன்னொருகாலத்தில் தசாதன் என்னும் ஒரு சக்ரவர்த்தி இருந்தான். அவன் அந்த நகரத்தைத் தனக்கு இராஜதானி நகரமாகக் கொண்டு உலகத்தை ஆண்டுவந்தான். அவனுக்குக் கௌஸல்யை, கைகேயி, ஸுமித்திரை என்று மூன்று மனைவிமார் இருந்தனர். ஆனால் வெகுகாலமாக அவனுக்குக் குழந்தைகள் இல்லாமலிருந்தன. ஆகையால் அரசன் புத்ரகாமேஷ்டி என்னும் ஒரு பெரிய யாகத்தைச் செய்தான்.

2. யாகத்தைச் செய்து முடித்த பிறகு அவ்வரசன் கௌஸல்யையினிடம் ஒரு பிள்ளையையும் கைகேயியினிடம் ஒரு பிள்ளையையும் ஸுமித்திரையினிடம் இரண்டு பிள்ளைகளையும் அடைந்தான். கௌஸல்யையின் பிள்ளைக்கு ஸ்ரீராமச்சந்திரன் என்னும் அழகிய பெயரையும் கைகேயியின் பிள்ளைக்குப் பரதன் என்கிற பெயரையும் ஸுமித்திரையின் குழந்தைகளில் மூத்தவனுக்கு லக்ஷ்மணன் என்கிற பெயரையும் இளையவனுக்குச் சத்ருக்நன் என்கிற பெயரையும் குல குருவாகிய வஸிஷ்டர் சூட்டியருளினர்.

3. ஆக இந்நால்வரில் ஸ்ரீராமச்சந்திரன் மூத்தவன்; அடுத்தவன் பரதன்; மூன்றாமவன் லக்ஷ்மணன்; சத்ருக்நன் எல்லோர்க்கும் இளையவன். நால்வரும் அழகில் இவர்களுக்கு ஒப்பானவர்களும் மேலானவர்களும் இல்லையென்று யாவரும் புகழ்ந்து கொண்டாடும்படி விளங்கினார்கள். இவர்கள், வெகுகாலத்திற்குப் பிறகு சக்ரவர்த்திக்கு அருமையாகப் பிறந்த குழந்தைகளாகையால், ஒருகுறைவுமில்லாமல் வளர்ந்து வந்தார்கள். தக்க வயது வந்ததும் தசரதன் நால்வரையும் குல குருவாகிய வஸிஷ்டரிடம் ஒப்புவித்துச் சகலகலைகளையும் பயிற்றும்படி செய்தான்; அரசர்களுக்குரிய யானையேற்றம் குதிரையேற்றம் வில் வித்தை யுத்தப்பயிற்சி முதலியவற்றையும் கற்றுக் கொடுத்தான். நால்வரும் குமார பருவத்தை அடைந்து மகா புத்திசாலிகளாகவும் ஒப்பும் உயர்வுமில்லாத வீரர்களாகவும் விளங்கினார்கள்.

4. இவர்களை இப்பொழுது எல்லோரும் புகழ்ந்து மகிழ்ந்தனர். இவர்களுள் ஸ்ரீராமச்சந்திரனே தன் அருமையான குணங்களால் எல்லோரையும் அதிகமாக ஸந்தோஷப்படுத்தினான். இக்காலத்தில் ஒருநாள், விசுவாமித்திரர்

என்னும் ஒரு முனிவர் இராஜாவினுடைய சபைக்கு வந்தார். தசரதன் அந்த முனிவரை மரியாதையுடன் வரவேற்று நமஸ்காரஞ்செய்து ஆசனத்திலே உட்காரவைத்துத் தானும் தன் ஆசனத்திலே உட்கார்ந்து, "சுவாமி, எளியேனை நாடி வந்த விஷயம் யாதோ?" என்று வெகு மரியாதையுடன் கேட்டான். முனிவர், "வேந்தே, நீர் எனக்கோர் உதவி புரிதல்வேண்டும்?" என்றார். தசரதன், ஸந்தோஷத்துடன், "அவ்வுதவி யாது?" என்று கேட்டான். முனிவர், "நான் செய்யும் வேள்விக்குக் காவலாக ஸ்ரீராமச்சந்திரனை அனுப்ப வேண்டும்" என்று கேட்டார். மன்னன், இந்தப்பேச்சைக் கேட்டதும், மனந்துடித்து உடல்பதறி உயிர் சோர்ந்து இரண்டு கரங்களையும் தலைமேல் குவித்துக்கொண்டு நின்று, "சுவாமி, ஸ்ரீராமன் சிறு குழந்தை யாயிற்றே! அவன் எப்படிக் காட்டிலிருந்து காவல்புரிவான்! அவனுக்குப் பதிலாக நான் வருகிறேன். என்னை அழைத்துக்கொண்டு போகலாம்" என்றான். முனிவர், உடனே கோபங்கொண்டு, ஆசனத்தை விட்டு எழுந்தார். அப்பொழுது அங்கிருந்த வஸிஷ்டர், அவருடைய கோபத்தைத் தணித்து அவரை ஆசனத்திலே உட்காரவைத்து, அரசனைப் பார்த்து, "இந்த முனிவரால் உமது புத்திரன் சகல நன்மைகளையும் அடைவான்; ஆகையினால் இவரோடு உமது புத்திரனைக் கொஞ்சமும் ஆலோசியாமல் அனுப்பும்" என்று சொன்னார். குருவினுடைய கட்டளையாகையினால் அரசன் உடனே, அவர் சொல்லில் மதிப்புவைத்து, "சுவாமி, அப்படியே செய்வேன்" என்று கூறி ஸ்ரீராமச்சந்திரனை விசுவாமித்திருடன் அனுப்பத் தீர்மானித்தான்; அவனுக்குத் துணை

யாக லக்ஷுமணனையும் அனுப்ப எண்ணி இருவரையும் உடனே சபைக்கு வரவழைத்து அவர்கட்குச் சொல்ல வேண்டிய புத்திமதிகளைச் சொல்லி அவர்களை முனிவரிடம் ஒப்புவித்து, "சுவாமி, இவர்களைக் காப்பது உமது கடன்" என்று தெரிவித்துக்கொண்டு வந்தனம் செய்தான். முனிவர், "வேந்தே, கவலைவேண்டாம்; ஸந்தோஷமடைந்தோம்" என்று இனியமொழி சொல்லி எழுந்து விடைகொண்டு இரண்டு குமாரர்களுடனும் புறப்பட்டார். தசரதன், அப்பொழுது ஸ்ரீராமலக்ஷுமணர்களைத் தழுவி முத்தமிட்டு "கண்மணிகளே! நீங்கள், பெரியவராகிய முனிவரிடம் வேலைகளைக் கருத்தோடு செய்து அவருடைய ஆசீர்வாத மடைந்து சுகமாகத் திரும்பி வாருங்கள்" என்று வாழ்த்தி அனுப்பினன். பிறகு முனிவர் அவர்களுடன் தாம் வேள்வி செய்யும் வனத்திற்குப் போய்ச்சேர்ந்தார்.

---

## அத்தியாயம் 2

### ஸ்ரீராமச்சந்திரனுடைய தீரச்செயல்களும் திருமணமும்

ஸ்ரீராமசந்திரனும் லக்ஷுமணனும் காட்டிலேயுள்ள விசேஷங்களையெல்லாம் கண்டு களித்தார்கள்; பெரியவர்களை அடுத்திருப்பவர்களுக்கு ஒரு குறைவும் நேராதென்பதைத் தெரிந்துகொண்டார்கள். நாட்டைவிடக் காட்டிலே அவர்கட்கு வேண்டிய செளகரியங்களெல்லாமிருந்தன. ஆகையினல் அவர்கள் அங்கு வசிக்க விருப்பமுடையவர்களானுர்கள்; முனிவரின் சொற்படி நடக்கவும் மனமுடையவர்களானுர்கள். இப்படிப்பட்ட அவர்களுடைய தன்மையைக்கண்டு விசுவாமித்திரர் மகிழ்ந்

தார்; அவர்களிடம் இராக்ஷஸர்களுடைய கொடிய குணங்களையும் தாம் செய்யும் வேள்விக்கு அவர்களாலே இடையூறுகள் நேரிடுவதையும் சொல்லி, வேள்விச்சாலைக்குக் காவலிருக்கும்படி இருவரையும் நியமித்தார்; பிறகு வேள்வி தொடங்கி நடத்தினர்.

2. அந்த வேள்வியைக் கெடுக்கத் தாடகை யென்னும் ஓர் அரக்கி அங்கே பேரிரைச்சலுடன் தோன்றி, மரங்களையும் மலைகளையும் வீசியெறிந்தாள். அந்த அரக்கியை ஸ்ரீராமச்சந்திரன் ஒரு கணைவிட்டுக் கொன்று பூமியிலே வீழ்த்தினன். பிறகு அந்த அரக்கியின் பிள்ளைகளாகிய மாரீசனும் ஸுபாகுவும் வந்தார்கள். இவர்களில் ஸுபாகுவை ஸ்ரீராமச்சந்திரன் ஓர் அம்பினலே கொன்ருன். மாரீசன் அதுகண்டு பயந்து எங்கேயோ ஓடி மறைந்துவிட்டான்.

3. அப்பால் விசுவாமித்திரர் வேள்வியை வெகு நன்ருய்ச் செய்துமுடித்து, ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு அந்தக் காட்டின்வழியே போனர். அங்கே வழியில் கிடந்த ஒரு கல்லில் ஸ்ரீராமச்சந்திரனுடைய கால் பட்டது. அந்தக்கல் அப்பொழுதே பெண்ணுருவமாயிற்று. ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் "ஆ! என்ன இது, கல் பெண்ணுய் விளங்குகிறது" என்றெண்ணி ஆச்சரியப்பட்டு முனிவருடைய முகத்தைப் பார்த்தார்கள். முனிவர், ஸ்ரீராமனை நோக்கி, "இவர் கௌதமர் என்னும் ஒரு முனிவருடைய மனைவியார்; இவர்க்கு அகல்யை என்று பெயர். ஒருகால் முனிவர் இவரிடம் கோபங்கொண்டு இட்ட சாபத்தினல் இவர் இப்படிக் கல்லாயினர். இப்பொழுது உன் பாதம் பட்டதனல் அந்தச்சாபம் நீங்கி

யது" என்று சொல்லி, அம்மாதை, கௌதமரிடம் சேர்ப்பித்து ஸ்ரீராமனையும் லக்ஷ்மணனையும் மிதிலைமா நகரத்திற்கு அழைத்துச் சென்றார்.

4. இங்கே, மிதிலைக்கு அரசனாகிய ஜனகமகாராஜன் தன்மகள் ஸீதைக்குத் திருமணம் நடத்த நிச்சயித்து அதற்கு ஒரு வில்லைப் பந்தயமாக வைத்திருக்கிறான். அதற்காக இச்சமயம் இந்நகரத்திற்குச் சகலதேச மன்னர்களும் வந்திருக்கிறார்கள். ஜனகமகாராஜனுடைய சபையில் எல்லோரும் வந்து அவரவர்க்குரிய ஆசனத்திலே வீற்றிருக்கிறார்கள். இப்பொழுது இச்சபைக்கு விசுவாமித்திர முனிவர் ஸ்ரீராமச் சந்திரனுடனும் லக்ஷ்மணனுடனும் சென்றார். ஜனகன், விசுவாமித்திரருக்குச் சகல உபசாரங்களையும் செய்தான். விசுவாமித்திரர் அரசனை ஆசீர்வதித்து அவனுக்கு ஸ்ரீராம லக்ஷ்மணர்களை இன்னாரென்று தெரிவித்து, "இச்சிறுவன் இந்தவில்லை வளைப்பான்" என்று ஸ்ரீராமச்சந்திரனைச் சுட்டிக்காட்டினார். உடனே அரசன், ஸ்ரீராமருக்கு அந்தவில்லைக் காட்டினான். அந்தவில்லை ஸ்ரீராமச்சந்திரன் எடுத்து வளைத்து மளமளவென்று முறித்தான். எல்லோரும் ஸ்ரீராமச்சந்திரனுடைய வீரம் பெரிதென்று புகழ்ந்து அவன்மீது மலர்மாரி பொழிந்தார்கள்.

5. பிறகு ஜனகமகாராஜன், தசரத சக்ரவர்த்திக்குத் திருமண ஓலை அனுப்பினான். தசரதன், தன் குரு, மந்திரிமார்கள், பந்துமித்திரர் எல்லோருடனும் புறப்பட்டு மிதிலைவந்து சேர்ந்தான். பிறகு நல்ல முகூர்த்த வேளையில் ஸ்ரீராமச்சந்திரனுக்கு ஸீதாதேவியை ஜனகன் அக்கினி சாக்ஷியாக விவாகம் செய்து கொடுத்தான். பெரியவர்கள் மகிழ்ந்து தம்பதியை ஆசீர்வதித்து அக்ஷதை தூவினார்கள்! மங்கையர் மங்களகீதம்பாடி வாழ்த்தினர்! தேவர்

கள் பூமழை பொழிந்து மகிழ்ந்தார்கள்! மங்களவாத்தியங்கள் முழங்கின.

6. இதற்கப்பால் ஜனகன் பெரியவர்களுடன் ஆலோசித்துத் தன்னுடைய இளையபெண்ணாகிய ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் தன் தம்பி பெண்களிருவரில் மாண்டவியை பரதனுக்கும், சுருதகீர்த்தியை சத்ருக்னனுக்கும் பாணிக்ரஹணம் செய்து கொடுத்தான். பிறகு விசுவாமித்திரர் எல்லோரையும் ஆசிர்வதித்துத் தமதாச்ரமம் சென்றார். தசரதன், தான் தன் குருவின் சொல்லைக் கடவாமல் விசுவாமித்திரருடன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களை ஒப்புவித்ததினாலே அடைந்த நன்மைகளை எண்ணி யெண்ணி மகிழ்ந்தான்.

7. இவ்வாறு திருமணம் முடிந்தபிறகு தசரதன் எல்லோருடனும் ஜனகனிடம் விடைகொண்டு அயோத்திக்குப் புறப்பட்டான். அவனோடு சேனைகளும் யானைகளும் குதிரைகளும் ஏராளமாகப் புறப்பட்டன. இப்படிப் புறப்பட்டுவரும் வழியில் ஸ்ரீராமச்சந்திரனைப் பரசுராமர் என்பவர் எதிர்த்தார். ஸ்ரீராமச்சந்திரன் அவருடைய காத்துவில்லை வாங்கி நாணேற்றி அம்பு தொடுத்து அதற்கிலக்காக அவர் தவத்தின் பயனை யடைந்து அயோத்திக்குச் சென்றான்.

---

## அத்தியாயம் 3.

### ஸ்ரீராமச்சந்திரனின் பெருந்தன்மை.

இப்படிப்பட்ட வைபவங்களுடன் ஸ்ரீராமச்சந்திரன் அயோத்திக்கு வரவே, அயோத்திமாநகரத்தில் யாவரும் குதூகலம் அடைந்தார்கள். ஸ்ரீராமச்சந்திரன்

விசுவாமித்திரரை அடுத்து அவருடைய திரு அருளினாலே சகல வித்தைகளையும் மந்திர உபதேசங்களையும் பெற்றான்! ஒருவராலும் வளைக்க முடியாத வில்லை வளைத்து முறித்து ஸீதாதேவியை மனைவியாகக் கொண்டான்; மகாபராக்ரமசாலியாகிய பரசுராமருடைய கர்வத்தை அடக்கி ஜயலக்ஷ்மியை அடைந்தான்! தசரதமகாராஜன் வெகுகாலம் பிள்ளைகளில்லாமல் வருந்தினனென்றாலும் நல்ல அறிவும் ஆற்றலும் அழகும் வாய்ந்த பிள்ளைகளை அடைந்தான்—என்று யாவரும் அங்கங்கே கூடிப் பேசிப் புகழ்ந்தார்கள்.

2. அப்பால் கொஞ்சநாட்களுக்கெல்லாம், பரதன் சத்ருக்நனுடன் தன் பாட்டனைப் பார்க்க, கேகயநாட்டிற்குச் சென்றான். அப்பொழுது ஒருநாள், தசரதன், தன் சபைக்கு வஸிஷ்டரையும் மந்திரிமார்களையும் வரவழைத்து வைத்துக்கொண்டு, "எனக்கு வயதாய் விட்டது. நான் இனிக் காட்டுக்குப்போய்த் தவம் செய்ய விரும்புகின்றேன்; ஸ்ரீராமச்சந்திரன் நல்ல புத்திசாலியாயும் எல்லோரிடத்திலும் அன்புடையவனாயும் இருக்கிறான்; எல்லோரும் அவனை நேசிக்கிறார்கள். ஆகையினால் அவனிடத்தில் இந்த இராஜ்யத்தை ஒப்புவிக்க நான் எண்ணுகிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டான்.

3. அவர்கள் இதைக்கேட்டதும் தங்களுடைய அரசனை விட்டுப் பிரிவதை எண்ணி முதலில் வருந்தினார்கள். பிறகு, ஸ்ரீராமச்சந்திரன் நல்ல புத்திசாலியாயும் இராஜ்ய பரிபாலனம் செய்யும் சாமார்த்திய முடையவனாயும் விளங்குவதை யெண்ணி, வேந்தனைப்பார்த்து, "பிரபுவே! வயது சென்ற இக்காலத்திலே தாம் ஒழிவடைந்து காலத்

த்தைத் தவத்திலே செலவழிப்பதும் ஸ்ரீராமச்சந்திரனிடத்தில் இராஜ்யத்தை ஒப்புவிப்பதும் நியாயமேயாம்,—

4. ஸ்ரீராமச்சந்திரன் பெரியவர்களுடைய பேச்சைத் தெய்வத்தின் கட்டளையாகக்கொண்டு கீழ்ப்படிந்து நடப்பவன். அவன் எல்லோரிடத்திலும் அன்புடையவன். அவனிடத்தில் அந்த அன்பை வளர்க்கும் பொறுமை சிறந்து விளங்குகிறது; எல்லோரையும் சமமாய் நடத்தும் தயை தழைத்திருக்கிறது. மாறுபாடில்லாமல் இருப்பதற்கு வேண்டிய உதாரத்வம் உயர்ந்திருக்கிறது. தனக்குத் தானே பெருமை அடையாமல் இருப்பதற்கு வேண்டிய அடக்கம் அமைந்திருக்கிறது; ஒழுங்கீனமாய் நடவாதிருப்பதற்கு வேண்டிய உபசரணை அவனிடம் உடன் பிறந்த பிறப்பைப் போலிருக்கிறது. தன்னலத்தை மாத்திரம் விரும்பாமலிருப்பதற்கு வேண்டிய பொதுநலக் கொள்கை அவனிடம் பூரணமாயிருக்கிறது. கெட்ட எண்ணம் உண்டாகாமலிருப்பதற்கு வேண்டிய அபேத எண்ணம் அவனை அடுத்திருக்கிறது; அநீதி வழியிலே மகிழாமல் நீதி வழியிலே மகிழ்வதற்கு வேண்டிய ஸத்தியம் அவனிடம் நிலைத்திருக்கிறது. பிரபுவே! ஸ்ரீராமச்சந்திரன் இப்படிப்பட்ட நல்ல குணங்களுடையவன். ஆகையினால் அவன் இந்த இராஜ்யத்தை ஆளுந்திறமையும் வீரமு முடையவனென்பதில் ஐயமில்லை. அவனுக்கு எல்லோரும் அடங்கி நடப்பார்கள்; அவனை நேசிப்பார்கள். கவலையில்லாமல் அவனிடம் அரசை ஒப்புவிக்கலாம்" என்று எல்லோரும் ஒரு மனதாய்ச் சம்மதம் தந்தார்கள்.

5. தசரதன், அவ்வாறே செய்யத் தீர்மானித்து. ஸ்ரீராமச்சந்திரனை ஸபைக்கு வரவழைத்தான். ஸ்ரீராமச்சந்திரன் அன்புடைய நல்லபிள்ளை, புத்திசாலி என்று எவ

ரும் புகழும்படி ஸபைக்குவந்து எல்லோரையும் முறைப்படி பணிந்து நின்றான். அவனைக்கண்டு எல்லோரும் மகிழ்ந்து வாழ்த்தினார்கள். தசரதனும் ஸந்தோஷமடைந்து, மைந்தனை நோக்கி, "ஸ்ரீராமா! உன்னை இந்த இராஜ்யத்துக்கு அரசனாக்கி நான் தவஞ்செய்வதற்காகக் காட்டுக்குப்போக இவர்களநுமதி பெற்றுத் தீர்மானஞ் செய்திருக்கிறேன்; உன் சம்மதம் என்ன? வயதான எனக்குத் தவத்தைவிட மேலான துணையுண்டோ?" என்று கேட்டான்.

6. ஸ்ரீராமச்சந்திரன், இதைக்கேட்டதும் தன் இரு கரங்களையும் உச்சிமேல் கூப்பி வணங்கி நின்று, "என் அருமைத் தந்தையே! பெரியோர்களே! நான் அரசுரிமை பெற்றுப் பரிபாலிப்பதற்குரிய வல்லமை ஒரு சிறிது மில்லாத சிறியன்; இராஜ நீதி உணராதவன்; இருந்தாலும் பெரியோர்களாகிய உங்களுடைய விருப்பம் அதுவாயின், நான் அவ்வாறு நடக்கக் கடமைப் பட்டவனாகிறேன்; ஆகையால் கட்டளையை விருப்போடு ஏற்றுக் கொள்கிறேன்" என்று வெகு பணிவாய் மறுமொழி கூறினான்.

7. இம்மறுமொழி கேட்டதும் தசரதன் ஸ்ரீராமச்சந்திரன் பிறந்தானென்னும் செய்தி செவியிலே விழுந்த போது அடைந்த ஸந்தோஷத்தைவிட அதிகமான மகிழ்ச்சியை அடைந்தான். பெரியவர்களெல்லோரும் பெருமகிழ்ச்சிகொண்டு ஸ்ரீராமச்சந்திரனைப் புகழ்ந்து "தந்தைசொல் மிக்க மந்திரமில்லை என்பதை உணர்ந்த உனக்கு ஈசுவரன் ஸர்வமங்களங்களையும் கொடுத்தருள்வாராக!" என்று வாழ்த்தினார்கள். பிறகு வசிஷ்டர் பட்டாபிஷேகத்திற்குரிய நல்ல நாளைப் பார்த்துச் சொன்னார். சபை கலைந்தது.

## அத்தியாயம் 4.

### ஸ்ரீராமச்சந்திரனுக்குத் தந்தையிட்ட கட்டளை.

ஸபையில் இப்படித் தீர்மானம் செய்தவைகளையெல்லாம் பதுங்கியிருந்து கேட்டுக் கொண்டிருந்த மந்தரை என்கிற தாதி கைகேயியின் அந்தப்புரத்திற்குப்போய் அவளை தூக்கத்தினின்று எழுப்பி, "நாளைக்கு உமது சகளத்திபிள்ளை ஸ்ரீராமனுக்குப் பட்டங் கட்டப்போகிறார்கள்" என்று சொன்னாள். கைகேயி உடனே கரைகடந்த களிப்படைந்து, "என் கண்மணியாகிய ஸ்ரீராமனுக்கு நாளைக்குப் பட்டங்கட்டப் போகிறார்களா? நல்லது ஸந்தோஷம்!" என்று சொல்லித் தன் கழுத்தி லணிந்திருந்த முத்தாரத்தைக் கழற்றி அவளுக்கு வெகுமதி கொடுத்தாள். மந்தரை அதனைப் பெற்றுக்கொள்ள மறுத்து, "நல்ல ஸந்தோஷம்! நன்றாயிருக்கின்றது வெகுமதி கொடுப்பது! ராமனுக்குப் பட்டங்கட்டினால் உமக்கு வாழ்வு வந்துவிட்டதாக எண்ணுகிறீர்கள் போலிருக்கிறது?" என்று கேட்டாள். கைகேயி, "ஏன் அப்படிச் சொல்லுகின்றாய்? ஸ்ரீராமன் என்னிடத்தில் அன்புடையவன்; அல்லாமலும் நல்லபிள்ளை என்கிற பேரெடுத்திருக்கிறான். அவனை ஊரெல்லாம் புகழ்கிறது. அவனுக்குப் பட்டங்கட்டினால் நமக்கெல்லாம் வாழ்வு வந்ததென்பதில் என்ன ஸந்தேகம்?" என்று கேட்டாள். மந்தரை, "ஸ்ரீராமனை நீர் நல்ல பிள்ளையென்று எண்ணுவதும் ஜனங்கள் அவனை நல்ல பிள்ளையென்று புகழ்வதும் இப்பொழுது பொருந்தும்! அவன் இராஜ்ய ஸம்பத்திற்கு உரியவனாய் இராஜாவாய் விடுவானானால் அப்பொழுது அவனை நீர் இப்படிப்பட்டவனென்று

தெரிந்துகொள்வீர்; ஸம்பத்து எப்படிப் பட்டவனையும் கர்வத்திற் குள்ளாக்குமென்பதை நீரேன் அறிந்துகொள்ளவில்லை. கர்வங்கொண்டவன் எவரை மதிப்பான்? அவனுக்கு நல்லார் பொல்லார் உற்றார் பெற்றார் என்பதும் தெரியுமோ? ஈட்டி யெட்டிய வரையில் பாயும், பணம் பாதாளம் வரையில் பாயும் என்பது பழமொழியல்லவா? இதைப்பற்றிக் காரியம் மிஞ்சிப்போன பிறகு ஆலோசிப்பதில் பயனில்லை. வெள்ளம் வருமுன் அணை போட்டுக்கொள்வது அறிவேயல்லாமல் வந்தபின் கையைப் பிசைந்துகொண்டு நிற்பது அறிவாகாது. ஆகையால், எது செய்யத்தக்கதோ அதை இப்பொழுதே ,செய்துகொள்ளும்; நான் சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டேன்! என்னுடைய பேச்சை இப்பொழுது மதியாவிட்டால், பிறகு நீரும் நானும் உமது பிள்ளை பரதனும் ஸ்ரீராமனுக்கும் அவன் அன்னையாகிய உமது சககளத்தி கௌஸல்யைக்கும் அடிமைகளாக வேண்டியதுதான்; அதையும் சொல்லிவிட்டேன். இனி உமதிஷ்டம்'' என்றாள்.

2. கைகேயி, சற்றுநேரம் சும்மாவிருந்து பிறகு "ஆம்; நீ சொல்லுகிறபடி நேரிடுவது கூடும், இது உலகத்திற்கு இயற்கையாம். இப்பொழுதுதான் என் மனத்திற்கு நீ சொன்னது நன்றாய்ப்படுகிறது. இனி இதற்கு என்ன செய்யத்தக்கது? அதையும் நீயே சொல்'' என்று கேட்டாள். மந்தரை, "அம்மணி, முன் ஒரு பெரிய சண்டை நடந்தபோது, அரசரிடம் நீர் இரண்டுவரம் பெற்றிருந்தீர்களல்லவா? அவ்விரண்டில் ஒன்றால் ஸ்ரீராமனைப் பதினான்கு வருஷம் காட்டிற்கனுப்பவும் மற்றொன்றால் பரதனுக்குப் பட்டங்கட்டவும் செய்யும்'' என்றாள். கைகேயி இந்த யுக்தியைக்கேட்டு மகிழ்ந்து மந்தரையைப் புகழ்ந்து அப்

படியே செய்வதாக வாக்களித்து அவளை அனுப்பிவிட்டாள்.

3. பிறகு கொஞ்சநேரத்திற் கெல்லாம் தசரதன் கைகேயியின் அந்தப்புரத்திற்குப் போனான்; அவள் தலைவிரி கோலமாய் ஓர் அறையிலே படுத்துக்கிடப்பதைப் பார்த்தான். அவள் அப்படிப் படுத்திருக்கக் காரணமென்னவென்று கொஞ்சநேரம் நின்று சிந்தித்தான்; பிறகு அவளருகேபோய் உட்கார்ந்து "கண்ணே! என் காதலியே!" என்று அன்பாய் அழைத்து "நீ இப்படி அலங்கோலமாய்ப் படுத்திருப்பதினால் ஏதோ கோபங்கொண்டிருக்கிறாய் என்று தெரிகிறது. நீ கோபங்கொள்ளக் காரணமென்ன? உனக்கென்னவேண்டும்? எது வேண்டுமானாலும் கேள்; ஸத்தியமாய்த் தருகின்றேன்" என்றான். ஸத்தியமாய்த் தருகின்றேன் என்ற பேச்சு செவியிலே விழுந்ததும், கைகேயி அதிலே பிடிப்பிருக்கின்றதென்று கண்டு, கண்விழித்துப் பார்த்து, "ஸத்தியமாய்த் தருகின்றேன் என்று சொல்லியபடி நடக்கவேண்டும்" என்று சொல்லி அரசனைக் கட்டுப்படுத்திக் கொண்டு தன் எண்ணத்தைக் கூசாமல் தெரிவித்தாள்.

4. தசரதன், அதைக்கேட்டதும், "ஆ என் கண்ணான ஸ்ரீராமச்சந்திரனையா காட்டுக்கனுப்ப வேண்டுமென்கிறாய்? அவனை இப்படிப்பட்ட கொடிய தண்டனைக்குள்ளாக்க நீ எப்படி மனங்கொண்டாய்? உன்னைத் தூண்டிய பாவியார்? பரதனைவிட ஸ்ரீராமச்சந்திரனை நல்லவனென்று நீ எத்தனையோ முறை என்னிடம் சொல்லியிருக்கின்றாயே! உன் விருப்பப்படி பரதன் இந்த இராஜ்யத்தை ஆளட்டும். ஸ்ரீராமனைக் காட்டுக்கனுப்பாமலிரு" என்று கூறி அவள் காலில் விழுந்து பணிந்து கேட்டுக்கொண்டான். கைகேயி

சிறிதும் மனமிரங்காமல் முரங்குப்பிடியாய்த் தான்கொண்ட எண்ணத்திலேயே பிடிவாதங்கொண்டு மன்னனை நோக்கி, "நீர் யாரைக்கும்பிடுகின்றீர்? யார் காலில் விழுகின்றீர்? என்னை அபலாக எண்ணலாமா? நம்மிருவருடைய சரீரமும் ஒன்று என்பதை மறந்து போனதேன்? என் வீண் மாய் மாலம்? சொன்னவாக்கைக் காப்பாற்றும்" என்றாள். வேந்தன், "அடியே! என் கண்ணல்லவா ஸ்ரீராமன்? கருத்தல்லவா? கண்ணுளனல்லவா? என்னைக் காப்பவனல்லவா? என் தெய்வமும் அவனல்லவா? அவன் நகரை விட்டு நீங்கினால் என்னுடலைவிட்டு என் உயிரும் நீங்கும்! இந்தப்பிடிவாதத்தை விடு" என்று கூறிக் கெஞ்சிக் கேட்டான். கைகேயி கொஞ்சமும் தன் பிடிவாதத்தை விடவில்லை. இதுகண்டு தசரதன், "ராமா! ராமா" என்று சொல்லிக்கொண்டே தன்னை மறந்து பூமியில் சாய்ந்தான்.

5. இப்பொழுது பொழுது விடியுந்தருணமாயிற்று. பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய யாவும் சித்தமாயின. வஸிஷ்டர் முதலியவர்கள் ஸபாமண்டபத்திற்கு வந்து தசரதன் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள். இந்நேரமாயும் அரசன் வாராத காரணமறிய, ஸுமந்திரன் கைகேயியின் அந்தப்புரத்திற்கு வந்தான்; தசரதன் விழுந்து கிடக்கும் அலங்கோலத்தைக்கண்டு கலங்கினான். கைகேயி, "ஸுமந்திரரே, போய் ஸ்ரீராமனை இங்கே அழைத்து வாரும்; மகாராஜா அவனைப் பார்க்க விரும்புகின்றார்" என்றாள். ஸுமந்திரன் "இதோ போய் அழைத்து வருகின்றேன்" என்று சொல்லி வணங்கிச் சென்றான்.

6. ஸுமந்திரன் அங்கிருந்து சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம், ஸ்ரீராமச்சந்திரன் அங்கே வந்து இருகாங்

களையும் குவித்துத் தலை குனிந்து தொழுது, "இதோ வந்தேன்; என்னை அழைத்ததேன்? உத்தரவிற்கு எதிர் பார்க்கின்றேன்" என்று வெகு பணிவோடு கூறினன். இப்பொழுது கைகேயி, ஸ்ரீராமச்சந்திரனை நோக்கி, "அப்பா, உன்னை உன் தந்தை தவக்கோலம் பூண்டு பதினன்கு வருஷம் காட்டுக்குப் போய்வரக் கட்டளையிட் டிருக்கின்றார்; பரதனுக்கு இந்த இராஜ்யத்தை ஆளக் கொடுத்திருக்கின்றார்! இவையிரண்டும் நான் அவரிடம் கொண்ட இரண்டு வரத்தின்படி ஏற்பட்டன. அப்பா, நீ உத்தமனுகையால், உன் தந்தை வாக்கைக் காப்பாற்றி அவரை ஸத்தியந்தவருதவராகச் செய்! நீ உன்னுடைய மேலான குணத்தை நிலைநிறுத்திக்கொள்; நல்லபிள்ளை யென்கிற பெயரை அடை" என்றாள்.

7. ஸ்ரீராமச்சந்திரன், உடனே கைகேயியைக் கரங்குவித்துத் தொழுது, "அம்மணி, இதற்கென்ன சிந்தனை? அடே ராமா இந்தத் தீயில் குதி! இந்தக் கடலிலே வீழ்ந்து மூழ்கு! இந்த விஷத்தைக் குடி என்று சொன்னலும் அந்த நிமிஷமே தாமதியாமல் செய்வேன்! தாயே! தந்தையின் கட்டளை யில்லாவிட்டாலென்ன? உமது சொல்லைத் தட்டுவேனு? என் தம்பி பெறும் செல்வம் என்னுடையதல்லவா? அம்மணி, நான் அப்படியே கானகம் போய் வருகின்றேன்; இதோ புறப்படுகின்றேன். விடைதர வேண்டுகின்றேன்" என்று சொல்லி, மூன்றுமுறை அவர்களை வலம்வந்து பணிந்து பெருமகிழ்ச்சியோடு சென்றான்.

---

## அத்தியாயம் 5.

### ஸ்ரீராமச்சந்திரனின் உறுதி.

இவ்வாறு விடைகொண்டு புறப்பட்ட ஸ்ரீராமச்சந்திரன், தன் அன்னை கௌஸல்யையின் திருமாளிகைக்கு வந்தான். இங்கு கௌஸல்யை தன் மகனுக்குப் பட்டாபிஷேகம் நடக்குமென்கிற மகிழ்ச்சியுடனிருந்தாள்; ஸ்ரீராமச்சந்திரன் பட்டாபிஷேகத்திற்குரிய கோலம் சிறிதுமின்றி இவ்வேளையில் இங்கு வந்தமையால் அவன் அப்படி வரக் காரணந் தெரியாமல் கலங்கினாள். ஸ்ரீராமச்சந்திரன் வந்ததும் தாயைப்பணிந்து "அம்மா நான் கானகம் போகின்றேன்; அங்குப் பதினான்கு வருஷம் வசிக்கப் போகின்றேன். பரதன் இந்த இராஜ்யத்தை ஆளப்போகின்றான். எனக்கு விடை கொடுத்தனுப்பும்" என்றான். கௌஸல்யை இதைக் கேட்டதும் திடுக்கிட்டு "அப்பா! திடீரென்று இப்படி நேரக் காரணமென்ன? நீ என்ன குற்றம் செய்தாய்?" என்று கேட்டாள். ஸ்ரீராமச்சந்திரன், "அம்மா நான் ஒருகுற்றமும் செய்யவில்லை. சிற்றன்னையார் தந்தையிடம் இரண்டு வரம் அடைந்தாராம். அவ்விரண்டில் ஒன்றால் எனக்குக் காடும் மற்றொன்றால் பரதனுக்கு நாடும் தந்தை கொடுத்திருக்கின்றார். அவர் வாக்குப்படி நான் கானகம் போகின்றேன். என்னைத் தடுக்காமல் விடை தந்தனுப்பும்" என்று சொல்லி அன்னையை வலம்வந்து பணிந்து சென்றான். கௌஸல்யை பெருந்துயரமடைந்து தன் நாயகனைக் காணச்சென்றாள்.

2. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் தன் மனைவி ஸீதையினிடம் சென்று செய்திகூறி அவளிடம் விடைகேட்டான்.

ஸீதை நல்ல குணவதி ; ஆகையினாலே, தானும் தன் நாயக னுடன் காட்டுக்குச்செல்ல விரும்பி அவனிடம் உத்தரவு கேட்டாள். ஸ்ரீராமன், அவளையும் தன்னுடன் காட்டிற்கு அழைத்துப்போக உடன்பட்டான். ஸ்ரீராமன் இவ்வாறு காட்டுக்குப் புறப்பட்ட செய்தி லக்ஷ்மணனுக்குத் தெரிந் தது. லக்ஷ்மணன் உடனே தன் தந்தையின் மீது கோபங் கொண்டான். ஸ்ரீராமன் அவனுடைய கோபத்தைத் தணித்துச் சமாதானங்கூறி அவனையும் தன்னோடு காட்டுக் கழைத்துச்செல்ல உடன்பட்டான். கைகேயி இவர்கள் உடுத்துக்கொள்வதற்கு ஒரு தாதியின் மூலமாக மரவுரிகள் கொடுத்தனுப்பினாள். ஸ்ரீராமச்சந்திரன் அவைகளை அன் போடு வாங்கி, தான் ஒன்று உடுத்துக்கொண்டு மற்றவை களைத் தன் மனைவிக்கும் தம்பிக்கும் தந்தான். இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரனைக் கௌஸல்யை, குரு வஸிஷ்டர், மந்திரி ஸுமந்திரன் மற்றும் யாவரும் காட்டுக்குப்போக வேண்டா மென்று பல நியாயங்கூறித் தடுத்தார்கள்; கைகேயியைச் சினந்து " சண்டாளி பாபி" என்று திட்டினார்கள். ஸ்ரீராமச் சந்திரன், அவர்களை நோக்கி "நான் என் தந்தையின் கட்டளையை நிறைவேற்றப்புறப்பட் டிருக்கின்றேன் ! எனக்கு அதுதான் பெரிது ! என்னைத் தடுக்கவேண்டாம்" என்று கூறி இரதம் கொண்டுவரும்படி ஸுமந்திரனுக்குச் சொன்னான். ஸுமந்திரன் உடனே திவ்யரதம் ஒன்று கொண்டுவந்து நிறுத்தினான். பிறகு ஸ்ரீராமச்சந்திரன் எல்லோரையும் பணிந்து "போய் வருகின்றேன்; பதினான்கு வருஷத்தை யும் நான் பதினான்கு நாள்களாகக் கழித்து வருகின்றேன்" என்று கூறிப்புறப்பட்டுத் தெருவில் முன்னே இரதஞ் செல்லப் பின்னே தன் மனைவி, லக்ஷ்மணன் இருவருட

னும் கால் நடையாகச் சென்றான். நகரத்து ஜனங்களும் பெரியோர்களும் கண்ணும் கண்ணீருமாக ஸ்ரீராமனைப் பின் தொடர்ந்தார்கள். ஸ்ரீராமச்சந்திரன் நகரக்கோட்டை வாயிலைக் கடந்ததும் எல்லோருக்கும் சமாதானஞ் சொல்லி திருப்பிவிட்டு மனைவியுடனும் லக்ஷ்மணனுடனும் இரதத்திலேறிக் கொண்டான். ஸுமந்திரன் இரதத்தைச் செலுத்தினான்.

---

## அத்தியாயம் 6.

### ஸ்ரீராமச்சந்திரன் பிதிர்வாக்ய பரிபாலனஞ்செய்து திரும்புதல்.

ஸூரியாஸ்தமனமாய் நன்றாய் இருள் சூழ்ந்தது. இப்பொழுது இரதம் அயோத்திமா நகர எல்லையைக் கடந்து வெகுதூரம் வந்து ஒருகாட்டை அடைந்தது. இந்தக்காட்டில் குகன் என்னும் ஒரு வேடராஜன் ஸ்ரீராமச்சந்திரன் வரவை அறிந்து அவனை அன்பாய் வரவேற்று நட்புக்கொண்டு வேண்டிய சௌகரியங்களைச் செய்தான். ஸ்ரீராமச் சந்திரனுக்கும் அவனிடம் நல்ல எண்ணம் உதித்தது. ஆகையால், அவன் குகனைத் தன் தம்பியைப்போல் நேசித்து அன்றிரவை அங்கே கழித்தான்; மறுநாள் ஸுமந்திரனை நகரத்திற்கு இரதத்தைச் செலுத்திக்கொண்டு போகும்படி சொல்லி யனுப்பிவிட்டு அந்த வேடராஜனுடைய உதவியால் கங்கை யாற்றைக் கடந்து பரத்வாஜர் என்கிற ஒரு முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தான். ஸ்ரீராமச்சந்திரனை அம்முனிவர் அன்பாய் வரவேற்று உபசரணைசெய்து ஆசீர்வதித்து அனுப்பினார். நல்ல பிள்ளைகளை எல்லோரும் விரும்புவார்களல்லவா!

2. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் சித்திரகூட பர்வதம்போய் அங்கே சிலநாள் தங்கி வனவிநோதங்களைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தான். அப்பொழுது ஒருநாள் பரதன் சத்ருக்கன் இருவரும் வந்து ஸ்ரீராமனைப் பணிந்தார்கள். அவர்களுடன் கௌஸல்யை, கைகேயி, ஸுமித்திரை முதலிய மூன்று தாய்மார்களும் வஸிஷ்டரும் வந்திருந்தார்கள். தன்னை வந்து வணங்கிய சகோதரர்களை ஸ்ரீராமச்சந்திரன் அன்போடு இருகரங்களாலுந் தூக்கி எடுத்துத் தழுவி மார்போடணைத்துக் கொண்டான்; தாய்மார்களையும் குருவையும் பணிந்தான்; "இங்குவரக் காரணமென்ன?" என்று தம்பிமார்களைப் பார்த்துக் கேட்டான். இப்பொழுது பரதன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. தொழுத கைகளிரண்டும் தலைமேலிருந்தன. அவன் ஸ்ரீராமச்சந்திரனைப் பெருந்துயரத்தோடு பார்த்து "அண்ணா, உமது பிரிவாற்றாமல் தந்தை இறந்தார். அவர் இறந்த செய்தி கேட்டு அயோத்திவந்த நாங்கள், தாம் இவ்வாறு வனத்திற்கு வந்ததை யறிந்து, இழவோலை கொண்டுவரும் பறையர்களைப் போல் தமக்கு அச்செய்தியைச் சொல்லித் தம்மை நகரத்திற்கு அழைத்துப் போக வந்தோம்" என்றான். ஸ்ரீராமச்சந்திரனும் லக்ஷ்மணனும் தந்தை இறந்த செய்தி கேட்டதும் பெருந்துயர மடைந்து அழுதார்கள். ஸீதையும் துயரம் சகியாமல் பெருங்குரலிட்டு அழுதாள். அவர்களை வஸிஷ்டர் தேற்றினார். ஸ்ரீராமச்சந்திரன் மந்தாகினி நதியில் தந்தைக்குத் தர்ப்பணஞ் செய்தான்.

3. பிறகு பரதன் ஸ்ரீராமச்சந்திரனுக்கு அநேக நியாயங்களைக் கூறி நகரத்திற்குவந்து இராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி சட்டாயப் படுத்தினான். வஸிஷ்டரும்

பல நியாயங்கள் கூறினர். ஸ்ரீராமச்சந்திரன், "நான் தந்தையின் கட்டளையை நிறைவேற்றுங் கடமையை மேற்கொண்டு வந்திருக்கிறேன். இன்னும் அதை நிறைவேற்றவில்லை. அதை நிறைவேற்றிய பிறகுதான் மற்றொன்றை நான் கவனிப்பேன்" என்று நியாயங்கூறி மறுத்துவிட்டான். பிறகு பரதன் ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதுகையைக் கேட்டு வாங்கிக்கொண்டு, "அண்ணா, நீர் நகரம் வரும்வரையில் இந்தப் பாதுகைதான் அரசுபுரியும்! நாங்கள் இதற்கு வேலைபாட்களாக இருப்போம்" என்று சொல்லி, ஸ்ரீராமச்சந்திரனை வலம்வந்து பணிந்து நகரத்திற்குத் திரும்பினன்.

4. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் பஞ்சவடி தீரத்திற்குச் சென்று அங்கு ஆசிரமம் ஏற்படுத்திக்கொண்டு வசித்தான். அப்பொழுது ஒரு பொன்மான் அவ்வழியே ஓடியது. அதனை ஸீதை தனக்குப் பிடித்துத் தரும்படி கேட்டாள். ஸ்ரீராமச்சந்திரன் அம்மானைத் தொடர்ந்து சென்றான். அவனைத் தொடர்ந்து லக்ஷ்மணனும் சென்றான். அப்பொழுது இராவணன் என்னும் ஓர் இராக்ஷஸன் ஸந்நியாஸி வேஷம்பூண்டு ஸீதையினிடம் வந்து அவ்வம்மையைத் தூக்கிக் கொண்டுபோய் விட்டான்.

5. பிறகு ஸ்ரீராமச்சந்திரனும் லக்ஷ்மணனும் அங்கு வந்து ஸீதையைக் காணமல் வருந்திக் காடுகள்தோறும் சென்று சென்று தேடினர்கள்; அப்படிச் செல்லுகையில் ஸுக்ரீவன் என்கிற வானரராஜனுடைய நட்பையும் ஹநுமான் என்கிற ஒரு வானரவீரனுடைய நட்பையும் அடைந்தார்கள்; அவர்களாலே ஸீதாதேவி இராவணனுடைய நகரமாகிய இலங்கையென்னும் தீவில் இருப்பதாகத் தெரிந்துகொண்டார்கள். பிறகு ஸ்ரீராமச்சந்திரன் வானர ஸைந்யங்களோடு கடலை அணைகட்டிக் கடந்துசென்று அந்தக்

கொடிய இராக்ஷஸனை அவன் வமிசத்தோடு நாசஞ்செய்து ஸீதையை மீட்டுக்கொண்டு அயோத்திக்குப் புறப்பட்டான்.

இதற்குள் பதினான்குவருஷ வனவாசமும் முடிந்தது. பரதன் ஸ்ரீராமச்சந்திரன் பதினான்காவது வருஷமுடிந்த மறுநாள் வந்தாலாயிற்று; இல்லாவிட்டால் தீயில் விழுந்து உயிர் விடுவதென்னும் தீர்மானங் கொண்டிருந்தான். ஆகையால் அவன் அயோத்தியில் தீயில்விழச் சித்தமானான்.

6. ஸ்ரீ ராமச்சந்திரன் தான் சொன்னபடி பதினான்காவது வருஷமுடிந்த மறுநாளில் அயோத்திவந்து சேர்ந்தான். பரதன் ஸ்ரீராமச்சந்திரனையும் தன் தம்பியையும் தன் அண்ணியாரையும் பரமானந்தத்தோடு வரவேற்றான்; உடனே பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து முடித்தான். பிறகு உலகமெல்லாம் புகழப் பெரியோர்கள் ஆசீர்வாதம் செய்து வாழ்த்த ஸ்ரீராமச்சந்திரனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தேறியது. "தந்தையின் வாக்கைக் காத்து தரணியில் தன் குலத்திற்கு அழியாத புகழை நிலை நிறுத்திய "இவனே நல்ல பிள்ளை! இவனே நல்ல பிள்ளை" என்று எல்லோரும் ஸ்ரீராமனை வாழ்த்தினார்கள். பரதனும் இராஜ்யத்தை உரியவனுக்குக் கொடுத்துத் தன் கடமையைச் செலுத்தினான் — இது ஒருவனிடத்திலே அமைவதற்கரிய நல்ல குணம் — என்று கூறி அவனையும் வாழ்த்தினார்கள். பிறகு ஸ்ரீராமச்சந்திரன், தன் புகழ் உலகமெல்லாம் பரவ நீதிதவறாமல் இராஜ்ய பரிபாலனம் செய்து நீடூழிகாலம் சுகமாக வாழ்ந்து வந்தான்.

சுபம்.

# ஸீ தா தே வி

## நல்ல மனைவி

---

### ஸீதையின் இளமையும் திருமணமும்.

மிதிலை என்னும் ஓர் அழகிய பட்டணத்தைத் தனக்கு இராஜதானி நகரமாகக் கொண்டு ஜனக மகாராஜன் விதேகநாட்டை ஆண்டு வந்தான். அவன் நீதி தவறாமல் தெய்வபக்தி யுடையவனாய்ப் பெரியோர்களிடத்திலே பணிவும் குடிகளிடத்தில் அன்பும் உடையவனாய் எல்லோரும் புகழ விளங்கினான். அவனுக்கு வெகுகாலம் வரையில் குழந்தைகள் இல்லாமல் இருந்தன. அதனால் அவன் இந்தக் குறைநீங்க பகவான் என்று திருவருள் புரிவாரோ என்கிற கவலையுடனிருந்தான்.

2. இப்படி இருந்து வருகையில் ஒருநாள் ஜனகன், பொற் கலப்பையில் வச்சிரக்கொழுவிட்டு ஏர் பூட்டி யாக பூமியை உழுதான். அரசர்கள் யாகபூமியைத் தாங்களே உழுவது அக்கால வழக்கம். அந்த வழக்கப்படி ஜனகனும் உழுது வந்தான். உழும்பொழுது அந்தக் கலப்பையின் வச்சிரக் கொழுமுகத்தில் சூரியனுதயமானது போல் ஒரு பெண் குழந்தை தோன்றியது. அந்தக் குழந்தையின் அழகு கண்களைப் பறித்தது. ஜனகன் அக்குழந்தையைக் கண்டதும் பெரிய ஆச்சரியமடைந்து, கடவுளின் திருவருளை எண்ணி மகிழ்ந்து இருகாங்களாலும் அதை வாரியெடுத்து முத்தமிட்டு அரண்மனைக்குக் கொண்டுபோய்த் தன் மனைவியினிடம் கொடுத்தான். மனைவி கரைகடந்த களிப்போடு குழந்தையைப் பெற்றுக் கொண்டு "ஜகதீசன் திருவரு

ளாலே கிடைத்த அரும்பெரும் செல்வமிது!" என்று கூறி அதை மார்போடணைத்து முத்தமிட்டுக் கடவுளை வணங்கினுள். அந்தக்குழந்தை கலப்பையின் நுனியில் கொழுமுகத்திலே தோன்றியபடியால் அதற்கு ஸீதை என்னும் திருப்பெயர் சூட்டி அரசனும் அரசியும் அதை அன்போடு மிகவும் செல்வமாக வளர்த்து வந்தார்கள்.

3. ஸீதை வளர்பிறையைப்போல் வளர்ந்து வந்தாள்; முதலில் தன் தாயின் முகம்பார்த்து நகைத்தாள்; பிறகு குப்பறித்துத் தவழ்ந்து எழுந்துட்கார்ந்தாள்; அப்பால் நின்று தளர்நடை நடந்து மழலைமொழி பேசி ஓடி ஆடி விளையாடித் தாய் தந்தைய ரிருவருக்கும் மட்டில்லாத மகிழ்ச்சியை உண்டாக்கினுள். * இப்படிப் பேதைப் பருவமடைந்த ஸீதைக்கு ஜனகன் வித்யாப்யாஸம் செய்வித்தான். ஸீதை பிறகு பெதும்பைப் பருவமடைந்து அப்பால் மங்கைப் பருவ முற்றுத் தங்கப் பதுமையைப் போல் விளங்கினுள்.

4. ஸீதை வளரவளர அவளுடன் கூடவே கல்வியும், அறிவும், நல்ல நடவடிக்கைகளும், தெய்வபக்தியும், ஒப்பும் உயர்வுமில்லாத அழகும் வளர்ந்து வந்தன. ஆகையால் ஸீதையினிடம் எல்லோரும் நல்ல மதிப்புவைத்து அவளைப் பெருமைப்படுத்தி வந்தார்கள். ஜனகனுங் கண்டு மனமகிழ்ந்து, ஸீதைக்கு விவாகம் செய்விக்க எண்ணங் கொண்டான். ஸீதையின் நற்குணங்கள் சூரியனுடைய கிரணங்கள்போல் எங்கும் பரவியபடிபடியால் அநேக அரசர்

* ஐந்து வயது முதல் 7 வயது வரையில் பேதை

| | | | | |
|---|---|---|---|---|
| 8 | ,, | 11 | ,, | பெதும்பை |
| 12 | ,, | 13 | ,, | மங்கை |
| 14 | ,, | 19 | ,, | மடந்தை |

கள் அவளை மணந்துகொள்ள விருப்பங்கொண்டு ஜனகமகாராஜனைக்கண்டு கேட்டார்கள். அவர்களில் யாருக்கு ஸீதையைக் கொடுப்பதென்று நிச்சயிக்க முடியாத அரசன் தன்னிடம் வெகுநாளாயிருந்த ஒரு பெரியவில்லை வரசுல்கமாக வைத்து "இந்த வில்லை வளைத்து நாணேற்றும் வீரனெவனோ அவனே ஸீதையை மணந்துகொள்வதற் குரியவனுவன்" என்று எங்கும் பறைபறைவித்தான். அது மிகவும் பளுவான பெரிய வில்லாகையினுல் அதனைத் தொட்டு அசைக்கவும் அவ்வரசர்களாலே முடியவில்லை. ஆகையினுல் அவர்கள் தாங்கள் கொண்ட எண்ணத்தை மறந்து வந்தவழியே திரும்பினுர்கள். இப்படி நாடோறும் அநேகர்வந்து வில்லைவளைக்க முடியாமல் திரும்பிப் போகத் தலைப்பட்டனர். இதைக்கண்ட ஜனகன் மலைத்து "இவ்வில்லை யார் வளைக்கப் போகின்றுர்கள்; எப்படி ஸீதையின் விவாகம் நடக்கப்போகிறது" என்கிற கவலை கொண்டான்.

5. இப்பொழுது விசுவாமித்திரர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் ஜனகனுடைய சபைக்கு வந்தார். ஜனகன் அவர்களை உபசாரணை செய்யவேண்டிய முறைப்படி உபசாரணை செய்து, அவர்கட்கு அந்த வில்லைக்காட்டித் தன் கருத்தைத் தெரிவித்தான். ஸ்ரீராமச்சந்திரன், அந்த வில்லையெடுத்துப் பிடித்து நிறுத்தி நாணேற்றினுன். அப்பொழுது அவ்வில் நடுவில் முறிந்து எல்லோரும் பயப்படும்படியான சப்தத்துடன் கீழே விழுந்தது. ஸ்ரீராமச்சந்திரனை எல்லோரும் புகழ்ந்து மகிழ்ந்து அவன்மீது மலர்மாரி பொழிந்து வாழ்த்தினர். பிறகு முறைப்படி ஜனகன் ஸீதாதேவியை ஸ்ரீராமசந்திரனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். அப்பொழுது ஜனகன் "என் புத்திரி

யாகிய இந்த ஸீதை உன்னுடனிருந்து சகல தருமங்களை யும் நிறைவேற்றுவாள். உனக்கு க்ஷேமமுண்டாகும். இந் நங்கையின் திருக்கரத்தைப் பிடித்துக்கொள். இவள் தன் னுடைய கணவனையே தனக்குக் கதியாகக்கொள்ளும் நல்ல குணமுடையவள். எப்பொழுதும் இவள் உன்னு டைய நிழல்போல் உன்னைவிட்டுப் பிரியாம லிருக்கவேண் மென்று நான் ஆசீர்வாதம் செய்கின்றேன் " என்று கூறி மந்திரத்தோடு தாரை வார்த்துக்கொடுத்தான். இந்த விவாகத்தை எல்லோரும் புகழ்ந்தனர்; தம்பதியை வாழ்த்தி மகிழ்ந்தனர்.

---

## அத்தியாயம் 2.

### ஸீதை கணவனோடு காட்டுக்குச் செல்வது.

இப்படி விவாகம் வெகு வைபவமாக நடந்தபிறகு, ஸ்ரீராமச்சந்திரன் தன் மனைவியுடன் அயோத் தியா நகரம் வந்து சேர்ந்தான். அயோத்தியில் ஸீதையும் ஸ்ரீராமச்சந்திரனும் தங்களிடத்தில் எல்லோரும் அன்பு பாராட்டத் தமது வாழ்வை நடத்திவந்தார்கள். ஸீதை தான் பிறந்த குலத்திற்கும் வாழ்க்கைப்பட்ட குலத்திற் கும் ஒரு தாழ்வும் உண்டாகக் கூடாதென்கிற உயர்வான எண்ணங்கொண்டிருந்தாள். ஆகையால் அதற்குத் தக்க படி பெரியவர்க ளிடத்திலும் தன் நாயக னிடத்திலும் நடந்துவந்தாள்; தன் நாயகனைத் தன்னுடைய இனிய உயிர்போல் நேசித்தாள். ஸ்ரீராமச்சந்திரனும் ஸீதை யைத் தன் உயிருக்கு ஓர் ஆலயமாக எண்ணி அன்பு பாராட்டி வந்தான். ஸீதை தன்னை மிகவும் நேசிப்பதை ஸ்ரீராமச்சந்திரன் அவளுடைய நடத்தையினாலும் வினை

யாட்டினாலும் தெரிந்துகொண்டு அவளிடம் ஸந்தோஷங் கொண்டான். ஸீதையும் இப்படியே தன் நாயகனுடைய அன்பை அறிந்துகொண்டு மகிழ்ந்தாள். ஸீதை அதி நுட்பமான அறிவுடையவளா யிருந்தமையால் தன் நாய கனுடைய கருத்தை அறிந்து பணிவிடை புரிந்து வந் தாள். மாமிமாருக்கும் மாமனாருக்கும் தான் செய்யவேண் டிய பணிவிடைகளை முறைதவறாமல் செய்து அவர்களை மகிழ்வித்தாள்; கொழுந்தன்மார்களிடத்தில் தான் எம்மாதிரி நடக்கவேண்டுமோ அம்மாதிரி நடந்து அவர்கள் முகம் கோணாமல் தன் கடமையைச் செய்து வந்தாள். வேலைக் காரர்களை மிகவும் அன்பாய் நடத்திவந்தாள். அவர்கள் எல்லோரும் ஸீதையைத் தங்கள் தாய்போலெண்ணி அன்புபாராட்டி எள் என்னுமுன் எண்ணெய் என்கிறபடி இட்டவேலைகளைச் செய்து வந்தார்கள்.

2. ஸீதையின் இந்த அரிய குணங்களைக் கண்டு எல் லோரும், இம்மாதரசியே ஸ்ரீராமச்சந்திரனுக்கேற்ற மனைவி என்றும் கௌஸல்யைக்கும் தசரதருக்கும் ஏற்ற மருமகள் இவளே என்றும் இந்த அயோத்தியைக் காக்க வந்த பிரத்தியக்ஷமான தெய்வம் இந்தப் பெண்மணியே என் றும் கொண்டாடினார்கள். பெருமையும் சிறுமையுந் தான் றரவருமே என்பது பெரியவர் திருவாக்கல்லவா? அது வீணாகுமா?

3. குற்றமற்ற குணமணிகளாகிய இவர்கள் இப்படி வாழ்ந்து வருகையில் பரதன் தம்பி சத்ருக்நனுடன் தன் மாமனிருக்கும் கேகய நாட்டிற்குப் போனான். இப் போது ஒருநாள் தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமனுக்குப் பட்டங்கட்ட நிச்சயித்தான். அரசனுடைய உத்திரவின்படி

பட்டாபிஷேகத்திற்குரிய ஒரு நல்ல நாள் வைக்கப்பட்டு அதற்குவேண்டிய முயற்சிகள் நடந்தன.

4. இச்செய்தி யறிந்த கைகேயி தன் மகன் பரதனுக்குப் பட்டங்கட்ட வேண்டுமென்றும் ஸ்ரீராமச்சந்திரனைப் பதினைன்கு வருஷம் காட்டுக்கனுப்ப வேண்டுமென்றும் தன் நாயகனிடம் பிடிவாதம் பிடித்தாள். தசரதன் தன்னுலியன்ற வரையில் அவளுக்குச் சொல்லி அந்தப் பிடிவாத குணத்தை விடும்படி வேண்டினன். அவள் கேட்கவில்லை. இதனை யறிந்த ஸ்ரீராமச்சந்திரன் கைகேயின் இஷ்டப்படி வனம் போக இணங்கி அவர்களிடம் விடைகொண்டு புறப்பட்டுப் பிறகு தன் நாயகியினிடம் சொல்லிக்கொள்ள அந்தப்புரம் வந்தான்.

5. பட்டாபிஷேகம் இப்படி நின்றுபோன செய்தி ஸீதைக்கு தெரியாதல்லவா; ஆகையினுல் ஸீதை தன் நாயகனுடைய க்ஷேமத்தை எண்ணி இப்பொழுது தன் இஷ்டதெய்வத்தை ஆராதித்துக் கொண்டிருந்தாள். நாயகன் அங்கு வந்ததை அறிந்ததும் ஸீதை மனமகிழ்ச்சியோடு ஓடிவந்து பணிந்தாள். ஸ்ரீராமச்சந்திரன் ஸீதையின் திருமுகத்தைப்பார்க்க வெட்கப்பட்டான். அவன் முகத்தில் ஒளிகுறைந்திருப்பதை ஸீதைகண்டு மனந்திடுக்கிட்டு ஆச்சரியத்துடன், "நாதா! ஸந்தோஷப்பட வேண்டிய இந்த நல்ல சமயத்தில் தமது முகத்திலேன் இப்படி ஒளி குறைந்திருக்கிறது? வெண்கொற்றக் கொடையின் கீழிருக்க வேண்டிய திருமுகமல்லவா இது? அழகிய வெண்சாமரை எங்கே? துதிக்கும் வந்தி மாகதர்கள் எங்கே? வாத்தியங்களெங்கே? மந்திரி முதலான பரிவாரத்தார் எங்கே?" என்று வெகு படபடப்போடு கேட்டாள். இப்பொழுது அவள் கண்களில் ஸ்ரீராமச்சந்திரனை நன்றுப்ப்

பார்க்கமுடியாதபடி நீர்ததும்பியது! இந்தத் துயர நிலையைக் கண்டதும் ஸ்ரீராமச்சந்திரன், தாங்கமுடியாத துயரங்கொண்டான். உடனே தோன்றிய துயரத்தை அடக்கிக்கொண்டு "கண்மணி, பெரியவரும் தருமந் தெரிந்தவரும் ஸத்தியசீலரும் சக்கரவர்த்தியுமாகிய என் தந்தை என்னைக் காட்டுக்குப்போகக் கட்டளையிட்டிருக்கின்றார். அவருடைய கட்டளைப்படி இப்பொழுது காட்டிற்குப்போக நான் புறப்பட்டிருக்கின்றேன்" என்றான்.

6. ஸீதை—(பயத்துடன் பார்த்து) ஏன் இப்படிப் பட்ட கட்டளை? தாம் என்ன குற்றஞ் செய்தீர்?

ஸ்ரீராமச்சந்திரன்—நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. என் சிற்றன்னையார் ஏற்கனவே தந்தையாரிடம் பெற்றிருந்த இரண்டு வரத்தின்படி, ஒன்றால் என்னைக் காட்டுக்கனுப்புகின்றார்கள். மற்றொன்றால் பரதனுக்கு இவ்வரசைக் கொடுக்கிறார்கள். ஒரு பதினான்கு வருஷம் போய் வர வேண்டுமென்பது கட்டளை. அதன்படி போய் வருகின்றேன். நீ இங்கேயே உன் மாமிமார்களுக்கும் மாமனுருக்கும் மற்றும் பெரியவர்களுக்கும் வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டிரு!— என்றான்.

7. இதைக்கேட்டதும் ஸீதை பிரமித்து மரம் போல் நின்றுவிட்டாள். ஸ்ரீராமன், அவளைக்கண்டு சகிக்கமுடியாத துக்கமடைந்தான். அவன் கண்களில் நீர் ததும்பியது. என்ன செய்வான்? துக்கத்தை அடக்கிக்கொண்டு, "கண்மணி" என்றழைத்து—

நீ பரதனுக்கு முன்பு என் குணங்களைப் புகழ்ந்து பேசாதே! பிறருடைய புகழ்ச்சியைக்கேட்கப் புத்தியுள்ள புருஷர்கள் விரும்பமாட்டார்கள். பரதன் இப்பொழுது அரசனுகையினாலே அவன் மனத்தில் வெறுப்புண்டாகும்

படி நீ நடவாதே! நீ உன்மனத்தைத் திடப்படுத்திக் கொண்டிரு! நான் காட்டிலிருக்கும்போது நீ இங்கிருந்து விரதஞ் செய். உபவாசமிரு; தேவாராதனையைக் கிரமமாய்ச் செய். என் தம்பிமார்களை நீ உன் புத்திரர்களாக எண்ணி அன்பாய் நடத்து. நீ ஒருவருக்கும் பிரிய மில்லாததைச் செய்வதில்லை யல்லவா? அதுபோல் என் பேச்சைக் கடவாமல் இங்கேயே இரு" என்று வெகு இனிமையாகச் சொன்னான்.

8. இதைக் கேட்டதும் ஸீதை ஸ்ரீராமச்சந்திரன் மேல் தான் கொண்டிருந்த பிரியத்தினாலே கோபங் கொண்டு "இப்படியேன் எனக்கு எளிதாக உறுதி கூறுகின்றீர்? நீர் பேசுவது நான்கூடப் பரிகாசம் பண்ணும்படியா யிருக்கின்றது! தாய், தந்தை, புத்திரர், மருமகள் ஆகிய இவர்கள் எல்லோரும் அவரவர் செய்த புண்ணிய பாவங்களை அவரவர்களே தனித்து அநுபவிக்கின்றார்கள். மனைவி ஒருத்தியே தன் கணவனுடைய புண்ய பாவங்களைப் பங்கிட்டுக்கொண்டு தானும் அநுபவிக்கின்றாள். ஆகையால் வனம்போக உமக்கிடப்பட்ட கட்டளை எனக்கும் இடப்பட்டதாம். ஸ்திரீகளுக்குத் தாய் தகப்பன், புத்திரன், தோழிகள் முதலியவர்கள் உதவியாகிறதில்லை. கணவனே எப்பொழுதுங் கதியாயிருப்பவன். ஆகையால் நான் தங்களுக்கு முன்னே இப்பொழுது காட்டுக்குப் புறப்படுவேன்; முட்களையும் கற்களையும் மிதித்துக்கொண்டு செல்வேன்!" என்றாள்.

ஸ்ரீ ராமச்சந்திரன்:—கண்மணி! நீ சொல்வது நியாயந்தான். காட்டிலே அநேக கஷ்டங்கள் ஏற்படக்கூடு மாகையினால் உன்னை அழைத்துக்கொண்டு போக மனந்துணியவில்லை. நீ இங்கேயேயிருந்து விரதங்களைச் செய்துவா.

ஸீதை:—நாதா! நான் என்ன குற்றம் செய்தேன்? இவ்வாறு தாம் என்னைப்பிரிந்து செல்ல விரும்புவதேன்? தன் கணவன் மாளிகையி லிருந்தாலும், விமானத்தின் மீதேறிச் சென்றாலும், வானவீதியிலே போக வல்லமை யிருந்து போனாலும், வேறு எப்படி யிருந்தாலும் மனைவிக்கு அவனுடைய திருவடி நிழலே கதியாகும். ஆகையால் நானும் உம்முடன் கூடவே வருவேன். பிறந்த வீட்டில் வசிப்பது போலவே வனத்தில் உம்முடன் சுகமாய் வசித்துக்கொண்டு உமக்குரிய பணிவிடைகளைச் செய்வதிலேயே கருத்தா யிருப்பேன். என்னால் உமக்கு யாதொரு வருத்தமும் உண்டாகாதபடி நடந்து கொள்வேன்.

ஸ்ரீ ராமச்சந்திரன்:—ஜானகி! நான் சொல்வதைக்கேள்; காட்டிற்கு என்னுடன்வந்து வசிக்கிற எண்ணத்தை விட்டு விடு. நான் போகிற இடத்தில் பெரிய கஷ்டங்கள் ஏற்படும். காட்டில் கொஞ்சமும் சுகம் கிடையாது. துன்பமே அதிகமாயிருக்கும். மலைக் குகைகளிலே வசிக்கும் சிங்கங்கள் கர்ஜித்துக் கொண்டிருக்கும். அவை மனிதர்களைக் கண்டு விட்டால் விரட்டிக்கொண்டு வரும். இவையன்றி மதயானைகளும், புலி, கரடி, சிவிங்கி முதலிய கொடிய வனவிலங்குகளும் எங்கும் உலாவும். ஜனங்களைக் காண்பதரிதாகும். சில இடங்களிலே நடக்கப் பாதையே இராது. மரத்திலிருந்து சருகுதிர்ந்திருக்கும் இடத்திலே தான் படுக்கவேண்டும். காய்களையும் கனிகளையுந் தான் புசிக்கவேண்டும். காட்டில் பசி அதிகமாய் எடுக்கும். காற்று அதிகமாய் அடிக்கும். இருட்டு மிகுதியா யிருக்கும். பெரிய மலைப்பாம்புகளும், ஸர்ப்பங்களும் வழியிலே படுத்துக் கிடக்கும். தேள்களும், புழுக்களும், காட்டீக்களும், கொசுக்களும் அதிகமாய் இருக்கும். காட்டில்

இப்படிப்பட்ட பலவகையான பயங்களுண்டு. ஸ்திரீயாகிய உனக்கு இப்படிப்பட்ட வனவாசம் தகாது. ஆகையால் நீ வனத்திற்கு வரவேண்டாம்.

ஸீதை—(கண்களிலிருந்து நீர் பெருகத் துக்கமடைந்து) நாதா! நீர் சொன்ன கஷ்டங்களெல்லாம் உம்மிடம் அன்புள்ள எனக்கு இன்பங்களாகவே இருக்கும். அதற்காகத் தாம் கவலைப்பட வேண்டாம். பெரியவர்களின் கட்டளைப்படி நானும் வனத்திற்கு வருவேன். உம்மைப்பிரிவதானல் என் உயிர் போய்விடும். நான் உமக்கு அருகே இருந்தால், எனக்கு யாதும் தீங்கு நேரிடாது. கணவனைப்பிரிந்த உத்தம ஸ்திரீ பிழைத்திருக்க மாட்டாளென்று நீரே எனக்குப் பலமுறை சொல்லி யிருக்கின்றீர். ஆகையால் நான் தனித்திருக்கமாட்டேன்; கூடவே வருவேன்; வனவாசத்திலே கஷ்டமுண்டு என்பதை நானறியாதவளா? கஷ்டமெல்லாம் யாருக்குவரும்? நல்ல மனமில்லாதவர்கட்கே ஒழிய நமக்கல்ல. எனக்கு நீர் தாம் தெய்வம்! நீர் எங்கிருந்தாலும் அங்கிருந்தே தீருவேன்! அதுதான் எனக்குப் பெருமை! நல்ல ஒழுக்கமுள்ள என்னை அழைத்துக் கொண்டுபோக விரும்பாமலிருப்பதன் காரணமென்ன? உமது சுகதுக்கங்களை எனது சுகதுக்கங்களாக எண்ணும் இயல்புடைய என்னை நீர் உம்முடன் அழைத்துக்கொண்டு போகாமற்போனல் விஷமுண்டாவது நான் பிராணனை இழப்பேன்—என்று கூறிக்கைகுவித்து வணங்கி "என்னை எப்படியாவது அழைத்துப்போக வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள்.

9. இவ்வாறு ஸீதை வேண்டிக்கொண்டும் ஸ்ரீராமச்சந்திரன் அவளை வனத்திற்குத் தன்னோடு அழைத்துச்

கொண்டு போக இணங்கவில்லை; பல நியாயங்களைச் சொல்லித் தடுத்தான். ஸீதை கேளாமல், "பிரபுவே, என் தந்தை உம்மைப்பற்றி என்ன நினைப்பார்? தைரிய மில்லாதவர் என்று எண்ணமாட்டாரா? இருக்கட்டும்; நீர் செய்யத்தகாத ஒருதீய செய்கையைச் செய்துவிட்டுக் காட்டுக்குப் போவதானால் அப்போது என்னை அழைத்துக்கொண்டு போக இவ்வளவு தூரம் சிந்திக்கவேண்டும்! அப்படியில்லையே! ஸாவித்திரியைப்போல் நானும் உம்மை அநுஸரிப்பேன். காட்டில் என்னால் உமக்கு ஒரு வருத்தமும் நேராது; என்னை நீர் வருத்தப்பட்டுக் காப்பாற்ற வேண்டாம்"—என்று சொல்லித் துயரம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீராமனைத் தழுவிக்கொண்டு அழுதாள்.

10. இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரன் தன் மனத்தில் இரக்கங்கொண்டு, "ஸீதே! துயரப்படாதே! உனக்குத் துன்பம் தருவதாயிருந்தால் நான் எதையும் விரும்பமாட்டேன். கடவுள் ஒருவருக்கும் அஞ்சாமலிருப்பதுபோல் நானும் ஒருவருக்கும் அஞ்சமாட்டேன். உன்னைக் காப்பாற்ற எனக்கு வல்லமையில்லாமல் போகவில்லை. எங்கிருந்தாலும் காப்பாற்றுவேன். நான் உன் எண்ணத்தை அறிந்தேன்—உன்னைவிட்டுப் பிரியேன். நீ என்னுடன் கூடவா? வந்து தருமத்தைச் செய். உன்னுடைய விருப்பப்படி வேண்டியமட்டில் பொருள்களை ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டுத் தாமதியாமல் புறப்படு" என்று கூறி அவளுடைய கண்களைத் துடைத்தான். ஸீதை உடனே மகிழ்ந்து தன் கணவன் சொற்படி தன் உடைகளையும் பொருள்களையும் எல்லோருக்குங் கொடுத்துவிட்டுப் புறப்பட்டாள்.

11. ஸ்ரீராமச்சந்திரன் தன்னோடு வனத்திற்கு வர விரும்பிய லக்ஷ்மணனுடனும் மனைவியுடனும் தந்தையி

ளிடம் சென்றான். தந்தை இங்கே சோர்ந்து கிடப்பதைக் கண்டு மூவரும் துக்கமடைந்தார்கள். அப்பொழுது இவர்கட்குக் கைகேயி உடுத்துக்கொள்ள மரவுரிகள் கொண்டு வந்து தந்தாள். ஸ்ரீராமச்சந்திரனும் லக்ஷ்மணனும் வாங்கி உடுத்துக்கொண்டார்கள். ஸீதை அதை உடுத்துக்கொள்ளத் தெரியாமல் வெட்கி நின்றாள். ஸ்ரீராமன் அதை வாங்கி அவளுடைய பட்டுப்புடவையின் மேலுடுத்தினான். இதைக் கண்ட எல்லோரும சகிக்கமுடியாத துக்கமடைந்து கைகேயியைத் திட்டினார்கள். கௌஸல்யை தன் மருமகளைக் கட்டிக்கொண்டு, "குற்றமற்றவளே! உன்னை இப்பொழுது காணும் என் மனம் பிளந்து வேறுகின்றது! இப்படிப்பட்ட கதி உனக்கு வரலாமா? கண்மணி! கணவன் கஷ்டப்படுங் காலத்தில் அவனை அவன்மனைவி லக்ஷியம் செய்வதில்லை; அவனால் பெருமைப் படுத்தப்பட்டபோது அடைந்த சுகங்களையெல்லாம் மறந்துவிடுவாள். இது பெரும்பாலும் பெண்களின் சுபாவமாயிருக்கிறது. நீ அப்படி யிராமல் உன் கணவனுடைய இந்தக் கஷ்டமான ஸ்திதியிலும் அவனையே கதியாகக் கொண்டிருக்கும் உன் உறுதியை நான் என்னென்று சொல்வேன்! சற்குணவதியாகிய உன்னை இந்த நிலையிலிருக்கப் பார்த்துக்கொண்டு நான் மரம்போ லிருக்கிறேனே!"—என்று கண்ணீர் விட்டழுதாள்.

12. ஸீதை, "அம்மா! அழவேண்டாம்; சிறிதும் அஞ்சவேண்டாம்; கணவனை அநுஸரிக்க வேண்டியது ஸ்திரீகளின் கடமையல்லவா? அதன்படி நடக்க நான் உறுதி கொண்டேன். நான் என் கணவனிடம் நடந்துகொள்ள வேண்டிய மரியாதைகளை எனக்கு என் தாய் தந்தையர் நன்றாய் உபதேசித்திருக்கிறார்கள். ஒளி சந்திரனை விட்டு

நீங்காமலிருப்பதுபோல் நானும் நல்ல ஒழுக்கத்தைவிட்டு நீங்காமலிருப்பேன். கவலைப்படவேண்டாம்'' என்று கூறிக் கரங்குவித்துத் தொழுதாள்.

13. இப்படி ஸீதை கூறியதும் கௌஸல்யை, அவள் தன் நாயகனிடம் வைத்திருக்கும் அன்பையும் அவளுடைய குணங்களையும் எண்ணி மகிழ்ந்தாள்; அந்த மகிழ்ச்சி தோன்றிய மறு நிமிஷமே, "அந்தோ! இந்த மாதரசிக்கும் இப்படிப்பட்ட காலம் வரவேண்டுமோ?" என்கிற எண்ணமும் உதித்துத் துக்கங்கொண்டு கண்களிலிருந்து நீரைப் பெருக்கினாள். ஸ்ரீராமன் தன் அன்னையைத் தேற்றிப் பிறகு எல்லோரையும் வலம்வந்து பணிந்து விடைகொண்டு புறப்பட்டான். ஊராரும் உறவினரும் கைகேயியைத் தவிர மற்றும் யாவரும் அப்பொழுது கண்ணீர் விட்டுக் கதறி அழுதார்கள். ஸ்ரீராமன், லக்ஷ்மணன் முன் செல்ல ஸீதை பின்னே வர இரதம் எல்லோர்க்கும் முன்னேபோகக் கால் நடையாய் நடந்து நகரத்தைக் கடந்தான். பிறகு இரதத்தில் மூவரும் ஏறிக்கொண்டார்கள். இரதம் வெகு வேகமாய்ச் சென்றது.

---

## அத்தியாயம் 3.

### ஸீதை வனவாசம் செய்தல்.

இவ்வாறு புறப்பட்ட இவர்கள் காட்டில் வெகு தூரம் வந்து கங்கையை ஓடமேறிக் கடந்து செல்கையில் ஸீதை கங்காதேவியை நோக்கி "என் நாயகன் வனவாசஞ் செய்து திரும்பிவரும்போது உன்

கரைமேலுள்ள தேவாலயங்களுக்கெல்லாம் நான் ஆராதனை செய்வேன். அவர் என்னுடனும் தம்பியுடனும் க்ஷேமமாகத் திரும்பிவந்து அயோத்தியை அடையட்டும்?" என்று வேண்டிக்கொண்டாள். ஸீதை எங்கிருந்தாலும் தன் கணவனுடைய க்ஷேமத்தைக் கோருகின்றவளல்லவா? ஆகையினால் இங்கே கங்காதேவியைக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

2. பிறகு அவர்கள் கங்கையைக் கடந்து கரையேறி வெகுதூரம் போய், பரத்வாஜருடைய ஆசிரமம் அடைந்து அவரைப்பணிந்து ஆசீர்வாதம் பெற்று, அவர் கூறிய வழியே சித்திரகூட பர்வதத்திற்குச் சென்றார்கள். வழியில் யமுனா நதியைக் கடந்து செல்ல நேரிட்டது. அதனைக் கடக்க ஸ்ரீ ராமச்சந்திரனும், லக்ஷ்மணனும் கொடிகளினாலும், மரக்கிளைகளினாலும், ஒரு தெப்பங் கட்டினார்கள். அவர்கள் அதிலேறிக்கொண்டு செல்கையில் ஸீதை யமுனையை நோக்கி, "என் நாதர் தமது நோன்பை நிறைவேற்றி க்ஷேமமாய் வந்து சேரட்டும். உனக்குப் பெரிய ஆராதனை செய்கின்றேன்" என்று வேண்டிக் கொண்டாள். அப்பால் அவர்கள் யமுனையைக் கடந்து காட்டின் வழியே வருத்தப்பட்டுக் கொண்டு நடந்து சென்று சியாமம் என்னும் ஒரு பெரிய ஆலமர நிழலையடைந்து அங்கே சற்றிருந்து இளைப்பாறினார்கள். அப்பொழுது ஸீதை அம்மரத்தை நோக்கி, "மகிமையுள்ள விருக்ஷமே! உன்னை நான் வணங்குகின்றேன். என் கணவன் வனவாச விரதத்தை முடித்து க்ஷேமமாய்த் திரும்பவேண்டும்" என்று கூறி அதை வலம் வந்தாள். ஸ்ரீராமச்சந்திரனும் லக்ஷ்மணனும் இப்படிப்பட்ட நல்ல குணமுடைய ஸீதையைக் காப்பதில் பெரியகவலை எடுத்துக் கொண்டார்கள். லக்ஷ்மணன் இங்குப் பல மரங்களிலிருந்து கனிகளையும் காய்களை

யும் கொண்டுவந்து சேர்த்தான். மூவரும் புசித்துப் பசி தீர்ந்து அங்கே உதிர்ந்து கிடந்த சருகுகளைப் பரப்பிப் படுத்துக் கொண்டார்கள். பிறகு மறுநாள் சித்திரகூட பர்வதச் சாரலுக்குச் சென்று அங்கே பர்ணசாலை ஒன்று ஏற்படுத்திக்கொண்டு வசித்தார்கள்.

3. பர்ணசாலை வெகு அழகாய் அமைந்திருந்தது. அதைச் சூழ நல்ல வாசனை வீசும் புஷ்பச்செடிகளை வைத்து ஸீதை வளர்த்து வந்தாள். அவைகளெல்லாம் நன்றாய் வளர்ந்து பர்ணசாலைக்கு இன்னும் நல்ல அழகைக் கொடுத்தன. இவர்களுக்குக் கானகவாசம் முதலிலே கஷ்டமாயிருந்தது. பிறகு வரவர அக்கஷ்டம் குறைந்தமையால் அவ்வாழ்வே நல்ல வாழ்வாயிற்று. பழக்கத்தில் எதுவும் சரியாய் விடுமல்லவா? அல்லாமலும் இங்குள்ள சித்திரகூட மலையும், மலையிலிருந்து பெருகிவரும் மந்தாகினி நதியும், அருவிகளும், அங்கு விளையாடும் மான் கூட்டங்களின் அழகும், அங்குள்ள பலவகை விருக்ஷங்களும் காண்டற்கரிய காட்சியாய் விளங்கின. ஆகையால், இவர்களுடைய கஷ்டம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

4. இப்படி யிவர்கள் இருந்துவருகையில் ஒரு நாள் பரதன் இங்கே வந்து ஸ்ரீ ராமச்சந்திரனை வணங்கித் தந்தை இறந்துவிட்ட செய்தி கூறிப் பெருந் துயரத்துடன் தன் அண்ணனை நகரத்திற்குத் திரும்பி வரும்படி அழைத்தான். இச்செய்தி கேட்டதும் மூவரும் தங்கள் துயரந் தீரக் கதறியழுது பின் ஒருவாறு தேறினார்கள். ஸ்ரீ ராமச்சந்திரன் பரதன் அழைத்தபடி நகரத்திற்குத் திரும்பிச் செல்ல மறுத்துத் தன் தந்தைக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன்களை மந்தாகினி நதியில் செய்து முடித்தான். பரதன் தன் அண்ணன் வரமாட்டானென்பது கண்டு

அவனுடைய பாதுகையைப் பெற்றுக்கொண்டு நகரஞ் சென்றான்.

5. இதற்குப் பிறகு ஸ்ரீராமச்சந்திரனுக்கு அங்கிருக்கப் பிடிக்கவில்லை. அந்த இடத்தைப் பார்க்கப் பார்க்க அவனுக்குத் துக்கம் மேலிட்டது. ஆகையினால் அங்கிருந்து மூவரும் புறப்பட்டுச் சில காடுகளைக் கடந்து சென்று அத்திரி முனிவருடைய ஆசிரமம் அடைந்து அவரைப்பணிந்து ஆசீர்வாதம் பெற்று அவருடன் சில பொழுது வசித்தார்கள்.

6. அப்பொழுது தன் கணவனை தெய்வமென்று வழிபடும் உத்தமியாகிய அத்திரி முனிவருடைய மனைவி அநஸூயை என்பவள், ஸீதையைத் தன்னருகே உட்கார வைத்துக்கொண்டு, "அம்மணி! உன் குணம் பெரிது; நீ உன் பதியை இந்தக் கஷ்டகாலத்திலும் பின்பற்றி வந்திருக்கிறாயல்லவா? நான் உன்னிடம் ஸந்தோஷப்படுகிறேன். தன் கணவன் நகரத்தில் வசித்தாலும் காட்டில் வசித்தாலும், நல்ல நடவடிக்கை உள்ளவனாயிருந்தாலும் இல்லாதவனாயிருந்தாலும் அந்தக் கணவனை விரும்பி அவனையே தெய்வமாகக் கொண்டு நடப்பவளே கற்புடையவளாவாள். உன்னிடம் அந்த அரிய குணம் விளங்குகின்றமையால் உனக்குப் புண்ணியமும் புகழும் உண்டாகும்" என்றாள்.

7. ஸீதை:—ஸந்தோஷம், தாயே! நான் என் நாயகனிடத்திலே நடந்துகொள்ள வேண்டியவைகளைப் பற்றி நாங்கள் வனத்திற்குப் புறப்படும்போது என் மாமியார் எனக்குச் சொல்லி யிருக்கின்றார்கள். அல்லாமலும் என் அன்னையாரும் எனக்குப் போதுமானபடி உபதேசித்திருக்கின்றார்கள். அவைகள் என் மனத்திலே நீங்காமல் பதிந்

திருக்கின்றன. கணவனுக்குப் பணிவிடை செய்வதொன்றே பெண்களுக்குத் தவம் என்பதுதான் அவர்கள் உபதேசம். பெண்ணுக்குத் தன் கணவனே குரு என்கிற நியாயமும் நானறிவேன். ஏழையாயும் கெட்ட நடத்தை புள்ளவனாயும் இருக்கிற கணவனை விரோத புத்தியில்லாமல் உபசரிக்க வேண்டியது என்போன்ற பெண்களின் கடமையாயிருக்கும்போது, சகல சத்குண சம்பத்தும் நிறைந்தவனாயும் மாதா பிதாக்களைப்போல் பக்ஷமுடையவனாயுமிருக்கிற என் நாயகனிடம் நான் அன்பு கொண்டிருப்பது ஒரு வியப்பாகுமா ?—என்றாள்.

8. அநஸூயை :—ஜானகி ! உன் பேச்சைக் கேட்ட என்னுள்ளம் மகிழ்கின்றது ; உனக்கென்ன வேண்டும் கேள்?

ஸீதை :—இன்னும் செய்ய வேண்டியதென்ன இருக்கிறது? எல்லாம் செய்திருக்கின்றீர்கள் ;

அநஸூயை :—நன்றாய்ச் சொன்னாய் ; என் ஸந்தோஷத்தினால் நான் உனக்குக் கொடுக்கும் ஆபரணங்களையும், கலவைச் சாந்தையும், மாலைகளையும் நீ பெற்றுக் கொள்—என்று சொல்லி அவைகளை மனமகிழ்ச்சியோடு ஆசீர்வாதம் செய்து கொடுத்தாள்.

9. ஸீதை அவைகளை இரண்டு கரங்களாலும் மிகவும் வணக்கத்துடனும், ஸந்தோஷத்துடனும் பெற்றுக்கொண்டு நமஸ்கரித்தாள். பிறகு அநஸூயை ஸ்ரீ ராமச்சந்திரன் ஸ்வயம்வரத்தில் ஸீதையை அடைந்த வரலாற்றைச் சொல்லும்படி கேட்க, ஸீதை வெகு பிரியமாயும் ஸந்தோஷமாயும் சொன்னாள். தன் நாயகனுடைய பெருமையைப் பற்றிப் பேசுவது ஸீதையைப் போன்ற பெண்களுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்குமல்லவா? இப்படி இக்கிருக்க

T S L. C. Examination, 1927.

Balavinodini Series No. 7

# Ramayana Rahasyam

BY

Varakavi Tiru
A. SUBRAMANYA BHARATI

Approved by the Text Book Committee

REVISED FOURTH EDITION



BALAVINODINI OFFICE
Royapettah, P. O. Madras.



[Price As. 10

திருக்கின்றன. கணவனுக்குப் பணிவிடை செய்வதொன்றே பெண்களுக்குத் தவம் என்பதுதான் அவர்கள் உபதேசம். பெண்ணுக்குத் தன் கணவனே குரு என்கிற நியாயமும் நானறிவேன். ஏழையாயும் கெட்ட நடத்தை யுள்ளவனாயும் இருக்கிற கணவனை விரோத புத்தியில்லாமல் உபசரிக்க வேண்டியது என்போன்ற பெண்களின் கடமையாயிருக்கும்போது, சகல சற்குண ஸம்பத்தும் நிறைந்தவராயும் மாதா பிதாக்களைப்போல் பக்ஷமுடையவராயு மிருக்கிற என் நாயகனிடம் நான் அன்பு கொண்டிருப்பது ஒரு வியப்பாகுமா ?—என்றாள்.

8. அநஸூயை :—ஜானகி ! உன் பேச்சைக் கேட்ட என்னுள்ளம் மகிழ்கின்றது ; உனக்கென்ன வேண்டும் கேள்?

ஸீதை :—இன்னும் செய்ய வேணடியதென்ன இருக்கிறது? எல்லாம் செய்திருக்கின்றீர்கள் ;

அநஸூயை :—நன்றாய்ச் சொன்னாய் ; என் ஸந்தோஷத்தினால் நான் உனக்குக் கொடுக்கும் ஆபரணங்களையும், கலவைச் சாந்தையும், மாலைகளையும் நீ பெற்றுக் கொள்—என்று சொல்லி அவைகளை மனமகிழ்ச்சியோடு ஆசீர்வாதம் செய்து கொடுத்தாள்.

9. ஸீதை அவைகளை இரண்டு கரங்களாலும் மிகவும் வணக்கத்துடனும், ஸந்தோஷத்துடனும் பெற்றுக்கொண்டு நமஸ்கரித்தாள். பிறகு அநஸூயை ஸ்ரீ ராமச்சந்திரன் சுயம்வரத்தில் ஸீதையை அடைந்த வரலாற்றைச் சொல்லும்படி கேட்க, ஸீதை வெகு பிரியமாயும் ஸந்தோஷமாயும் சொன்னாள். தன் நாயகனுடைய பெருமையைப் பற்றிப் பேசுவது ஸீதையைப் போன்ற பெண்களுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்குமல்லவா? இப்படி இங்கிருந்த

பிறகு மூவரும் புறப்பட்டுப் பெரிய காட்டில் நுழைந்து சென்றார்கள். அப்படிச் செல்லும்போது ஒரு காட்டில் விராதனென்கிற ஓர் அரக்கன் இவர்களை எதிர்த்து ஸீதையை அபகரித்தான். அவன்மீது ஸ்ரீராமச்சந்திரன் சரங்களை மாரியாகப் பெய்து அவனைத் தண்டித்தான். அவன் ஸ்ரீராமச்சந்திரன் முன் நிற்கமாட்டாமல் ஸீதையை அவனிடம்விட்டு வணங்கி விடைகொண்டு சென்றான். அதற்கப்பால் மூவரும் பற்பல காடுகளைக் கடந்து சென்றார்கள்; முனிவர்கள் பலரைக்கண்டு தரிசித்து அவர்களுடைய ஆசிரமங்களிலே மாதக்கணக்காகவும் வருஷக் கணக்காகவும் வசித்திருந்து அவர்களுடைய ஆசீர்வாதம் பெற்றுக் கடைசியில் அகஸ்தியருடைய ஆசிரமத்திற்குச் சென்று அவரை வணங்கி அவருடைய ஆசீர்வாதமும் பெற்றார்கள்; பிறகு அவருடைய சொற்படி பஞ்சவடி யென்னும் ஒரு திவ்விய ஸ்தலத்திற்குப்போய் அங்கே ஓரிடத்தில் ஆசிரமங்கட்டிக்கொண்டு வசித்தார்கள்.

---

## அத்தியாயம் 4.

### ஸீதாபஹரணம்.

பஞ்சவடி என்பது கோதாவரிநதிக்கருகே நீர்வளமும் நிலவளமும் நிறைந்த ஓர் அழகான இடம். அங்கே மலர்களும் காய்கனிகளும் நிறைந்த மரங்களடர்ந்த சோலைகள் பலவுண்டு. இது ஜனசஞ்சாரமற்ற தனியிடமாதலால் தவத்திற்குத் தகுதியாயிருந்தது. இங்கே பர்ணசாலையும் வெகு அழகாய் அமைந்தது; மனோகரமான பூஞ்

செடிகளுடன் கூடியதாய் விளங்கியது. ஸீதை இங்கே காட்டுக்குவந்த கவலை ஒரு சிறிதுமின்றி வசித்திருந்தாள்; நாயகனுக்குத் தான் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்த வேளைபோக மற்ற வேலைகளில் மான்களுடனும் கிளிகளுடனும் கொஞ்சி விளையாடி வெகு விநோதமாக நாளைக் கழித்தாள். ஸ்ரீராம லக்ஷ்மணர்களிருவரும் தங்கள் காலத்தை வெகு சுகமாகக் கழித்தார்கள்.

2. இப்படி இவர்களிருக்கையில் ஒருநாள் அந்தப் பர்ணசாலையின் பக்கமாய்ப் பொன் வர்ணமான ஒருமான் வந்தது. அதைப் பிடித்துத்தரும்படி ஸீதை தன் நாயகனை வேண்டினாள். ஸ்ரீராமன் அதைப் பிடிக்கத் தொடர்ந்து சென்றான். பிறகு லக்ஷ்மணனும் ஸ்ரீராமனைத் தேடிக் கொண்டு சென்றான்.

3. இப்படி ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் ஸீதையை விட்டுப் பிரிந்தவேளையில், அந்தப்பர்ணசாலைக்கு ஒருவன் வந்தான். அவன் தன் கழுத்தில் உருத்திராக்ஷ மாலையும் காவிலே அழகிய பாதக்குறடும் பூண்டிருந்தான்; இடையில் மெல்லிய காவியுடை உடுத்துக் கொண்டிருந்தான்; தோளில் தண்டமும் கையிற் கமண்டலுவும் கொண்டிருந்தான்; நீண்ட சடைமுடி தாங்கிக்கொண்டிருந்தான். ஆகையால் அவனொரு ஸந்நியாசியைப் போலிருந்தான். இப்படிப்பட்ட அவனைக் கண்டதும் ஸீதை யாரோ வந்திருக்கிறார் என்று கருதி அவனை வெகு பணிவோடு வரவேற்றுக் கால்கழுவ ஜலங்கொடுத்து ஆசனமிட்டு உட்காரச்செய்து பழங்களைக் கொண்டுவந்து வைத்து "இவைகளையுண்டு பசியாறும். கொஞ்சநேரத்துக் குள் என்நாதனும் கொழுந்தனும் வருவார்கள்" என்று உபசரித்தாள். வந்தவன் "பெண்ணரசே! நான்யார் தெரியுமா?

நான் பரதேசியல்ல. நான் அரக்கர்களுக்கெல்லாம் அரசன். இராவணன் என்னும் பெயருடையவன்; உலகமெல்லாம் நடுங்கச்செய்பவன்; இலங்கைக்கு அதிபதி. என் ஆண்மையை எவ்வுலகத்தவரும் அறிவார்கள். நீ ஏன் இங்கிருந்து கஷ்டப்படுகிறாய்? என்னுடன் வந்துவிடு. என் அரண்மனையில் அநேக அடிமைகள் உனக்கு வேலை செய்வார்கள். நீ அரசியாயிருந்து சகல சுகங்களையும் அனுபவிக்கலாம்'' என்று சொன்னான்.

4. ஸீதை அவனை வஞ்சகனென்று அறிந்துகொண்டாள். ஆகையால் அவள், அவனை வெறுப்போடு பார்த்து "நல்லது! நல்லது! இந்த இடத்தைவிட்டு நீர் மரியாதையுடன் இப்பொழுதே விலகிப்போம். இல்லாவிட்டால், உம்முயிருடன் நீர் உம்முடைய இருப்பிடத்திற்குப்போக மாட்டீர். என் நாதன் வரும் வேளையாயிற்று. அவருடைய பராக்கிரமத்தை நீர் அறியமாட்டீர். அவருடைய புருவம் நெறியுமாயின் இந்த உலகமெல்லாம் அந்த நிமிஷமே அழியும். நரி, சிங்கத்தின் மனைவியை விரும்பியதுபோல் நீர் என்னை விரும்புகிறீர்! மான், தன் பகையான சிங்கத்தின் பல்லைப் பிடுங்க முயல்வதுபோல நீர் முயற்சி செய்கின்றீர்! கண்களை ஊசியினாலே துடைத்துக்கொள்கிறீர்! இருப்புச் சூலத்தின்மீது நடக்கக் கருதுகின்றீர்! நான் ஒழுக்கந் தவறாத ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவினுடைய பிரிய பத்தினியென்பதை நீர் எண்ணவேயில்லை! சிங்கத்துக்கும் நரிக்கும், கடலுக்கும் சிற்றாறுக்கும், அமிர்தத்திற்கும் நஞ்சிற்கும், யானைக்கும் பூனைக்கும் எத்தனை வித்யாஸமுண்டோ அத்தனை வித்தியாஸமுண்டு என் நாதனுக்கும் உமக்கும்! ஏன் இந்த மூட முயற்சி? இதைவிட்டு அப்பாலே சென்று உயிர் தப்பும்'' என்று வெகு துணிவாய்ச் சொன்னாள்.

5. ஸீதை இவ்வாறு பேசவும் அந்த இராவணன் "ஓ! ஓர் அற்ப மனிதனுக்கா நான் பயப்படுவேன்! நல்லது சொன்னாய்! இதோ உன்னை எடுத்துச்செல்கிறேன், அவன் என்னை என்ன செய்வான்?" என்று கூறித் தேகம் குலுங்கச் சிரித்து ஆர்ப்பரித்து ஓடிவந்து ஒரு யானை ஒரு பூங்கொடியை எடுப்பதுபோல் ஸீதையைத் தூக்கி எடுத்துத் தன் இரதத்தின்மேல் வைத்துக்கொண்டு போய்விட்டான். பெண்ணரசியாகிய அவள் என்ன செய்வாள் பாவம்! பலவாறாகப் பிதற்றிப் புலம்பிக்கொண்டே சென்றாள்.

6. இவ்வாறு ஸீதையைக் கொண்டுபோன இராவணன் ஆகாய வீதிவழியே இலங்கைபோய்த் தன்னுடைய அழகிய அரண்மனையிலே அவளை வைத்துவிட்டு, ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கண்டுபிடித்துக் கொல்வதற்காக அநேக அரக்கர்களை அனுப்பி ஸீதை தனக்குக் கிடைத்து விட்டாள் என்கிற ஸந்தோஷ சித்தனாயிருந்தான்.

7. அப்பால் இரண்டொருநாள் பொறுத்து இராவணன் ஸீதையிடம்போய் நின்று தன்னுடைய பெருமைகளையெல்லாம் எடுத்துப்பேசித் தன்னுடைய அரண்மனையிலே தன்னுடனிருக்கும்படி அவளை வேண்டினான். தன் கணவனையன்றி உலகத்திலே வேறு எதையும் பொருட்படுத்தாத உத்தமியல்லவா ஸீதை? அந்தக் கொடியவன் பேசிய ஆசைமொழிகள் அவளை என்னசெய்யும்? பாறையின்மேலே எய்த அம்புகளைப்போல் அவைபயனில்லாமற் போயின. ஆகையால் ஸீதை திடமனதுடன் தன் முன் ஒரு சிறு துரும்பை எடுத்து வைத்து அதைப்பார்த்துக்கொண்டே வெகு துக்கத்துடன் "அடே, பிரபுவாகிய ஸ்ரீராமபிரானுக்கு எதிரில் என்னை நீ எடுத்து வந்திருப்பாயாயின் நீ அந்தப் பஞ்சவடியிலேயே

மாண்டுபோயிருப்பாய்! வஞ்சகமாக என்னைக்கொண்டு வந்த பொழுதே உன் பெருமையையும் உன் வல்லமையையும் நானுணர்ந்தேன்! உன்னுடைய செல்வத்தை நான் என் கடைக்கண்ணாலும் பார்க்கமாட்டேன். நீ தொட்ட இந்த உடலைக் கட்டினாலும் கட்டு! அன்றி இரண்டு துண்டாக வெட்டினாலும் வெட்டு! அதற்கு நான் அஞ்சேன்! ஸீதை கெட்டவள் என்கிற பழிச்சொல் பிறப்பதை மாத்திரம் நான் பொறுக்கமாட்டேன்" என்று சொல்லி வேறுபக்கம் திரும்பிக்கொண்டாள்.

8. இராவணன் உடனே கோபங்கொண்டு அரக்கிகளை நோக்கி "இவளைக் கொண்டுபோய் நமது அசோக வனத்தில் வைத்து நயமும் பயமும் காட்டிக் காட்டிவிருந்து கொண்டுவந்த பெண்யானையைப் பழக்குவதுபோல் இவளை வசப்படுத்துங்கள்" என்று கட்டளையிட்டுச் சென்றான். அரக்கிகள் அவனுடைய கட்டளையின்படி ஸீதையை அழைத்துக் கொண்டுபோய் அசோகவனம் என்கிற ஓர் அழகிய நந்த வனத்திலே வைத்தார்கள். கொடியவர்களாகிய அரக்கிகளின் வசமான ஸீதை புலிகளுக்கிடையி லகப்பட்ட பெண்மானைப் போல் அச்சமடைந்து தன் நாயகனுந் தெய்வமுமான ஸ்ரீராமச்சந்திரனையே எப்போதும் எண்ணிக் கொண்டிருந்தாள்.

---

## அத்தியாயம் 5.

### ஸீதையை ஸ்ரீராமன் மீட்பது.

ஸீதை இங்கே வந்து சில நாட்கள் சென்றன. அப்பால் ஒருநாள் இராவணன் ஸீதையிடம் வந்து அவளைப் புகழ்ந்து ஸ்ரீராம லக்ஷ்மணர்களை இகழ்ந்து பேசித் தன் பெருமைகளையும் பராக்கிரமத்தையும் ஐசுவரி

யத்தையும் உயர்த்திக் கொண்டாடித் தன் எண்ணத்தைத் தெரிவித்தான். ஸீதை அவனுடைய பேச்சைக் கேட்கப் பொறுமல் செவிகளைப் பொத்திக் கொண்டாள்; 'ஸ்ரீராமா ஸ்ரீராமா' என்று ஸ்ரீராமச்சந்திரனுடைய திருநாமங்களைக் கூறினுள். துக்கம் மிகுந்தமையால் அவள் கண்களிலிருந்து நீர் பெருகி முத்துத் துளிகளைப்போல் கீழே விழுந்தன! என்ன செய்வாள். தீவாய்ப் புழுவாய்த் துடிக்கின்றுள். இந்த நிலையையடைந்த அவள், "அடே இராவணு! உன் வாழ்வும் உன் பராக்கிரமும் எனக்குப் பெரிதல்ல; நான் நல்ல குலத்திலே பிறந்து நல்ல குலத்திலே தோன்றிய நாயகனுக்கு வாழ்க்கைப்பட்டு நல்ல நடவடிக்கைகளையே ஆபரணமாகக் பூண்டிருப்பவள் என்பதை நீ அறியாமல் பேசுகின்றுய்! பிறர்மனை விழையாமை அறமெனத்தகும்? என்னும் நீதிமொழிகளை உனக்கெடுத்துச் சொல்லி உன்னைத் தடுப்பவரில்லையா இங்கு? உனக்கும் உன் நாட்டுக்கும் கேடுகாலம் கிட்டிவிட்டது போலிருக்கிறது. இல்லையானுல் நீ என்மேல் இப்படி ஆசைகொள்ள மாட்டாய். முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டால் கிட்டுமா? சை! இந்த எண்ணத்தை மற; என்னை என் நாயகனிடம் விட்டு விடு; அவர் பெரிய கருணையும் அன்புமுடையவர்; அவர் உன்னைக் கோபியாமல் மன்னித்து விடுவார். அப்படிச் செய்யாமல் அவருக்குக் கோபமுண்டாக்குவாயானுல் நீ தப்பமாட்டாய். உன் வமிசமும் தப்பாது" என்றுள்.

2. இராவணன் கொஞ்ச நேரம் நயந்துபேசிக் கெஞ்சினுன்; கொஞ்சநேரம் அதட்டி மிரட்டிப் பயமுறுத்திப் பார்த்தான்; கடைசியில் தன் உடைவாளை வீசி வெட்டவும் வந்தான். ஸீதை ஒன்றுக்கும் பயப்படாமல்

அவனை அவமதித்தனுப்பி விட்டாள். அவன் சென்ற பிறகு அரக்கிகள் கொல்லுவோம் என்றும் வெட்டுவோம் என்றும் குடலைப் பிடுங்குவோமென்றும் கூறி ஸீதையைப் பயப்படுத்தினார்கள். தங்கள் எஜமானாகிய இராவணனுடைய பெருமையைப் பலபடியாகப் புகழ்ந்து "ஏன் வந்த அதிர்ஷ்டத்தைக் காலாலுதைத்துத் தள்ளுகிறாய்? அடி பைத்தியக்காரி" என்றும் கூறினார்கள்.

3. ஸீதை "ஐயோ பரபுருஷனிடம் அகப்பட்டு மானம் பறந்து போகப் போகிறதே! இன்னும் என் நாதன் வரவில்லையே! அந்தோ அவருக்குச் செய்தி எட்டியதும் எட்டாததுங்கூடத் தெரியவில்லையே! என்ன செய்வேன்? எத்தனை நாளைக்கு இப்படித் துன்பப்படுவேன்! செய்திதெரிந்து, பரபுருஷனால் சிறையெடுக்கப் பட்டவளைக் கண்டுபிடித்துச் சேர்த்துக்கொள்வது இழிவென்று கருதி என்னை அவர் மறந்துவிட்டாரோ? ஒன்றுந் தெரியவில்லையே! ஐயோ! இதுவோ என்விதி"—என்று கூறி அழுது புலம்பிக்கொண்டே ஒரு மரத்தடிக்குப் போய்த் தன்னுடைய கரிய கூந்தலைக் கையிலே பிடித்துக்கொண்டு நின்று "நான் செய்த விரதமெல்லாம் பயனற்றுப்போயின! நான் என் கணவனையே தெய்வமென நம்பிக் கும்பிட்டதெல்லாம் வீணாயின! அந்தோ! எனக்கு நல்லகாலம் கிடையாது போயிருக்கிறது. ஆ! விதியே! உன்வல்லமைக்கு என் நாதனுடைய திருக்கரத்திலிருக்கும் கோதண்டத்தினிடம் பயமில்லைபோயிருக்கிறது. இருக்கட்டும், என் உயிரிருக்கும் வரையிலே தானே என்னைப் பிடித்தாட்டுவாய்? இதோ சாகின்றேன்" என்று கூறித் தன் கூந்தலை மரக்கிளையிலே கட்டி நான்று கொள்ளப் போனாள்!

4. இச்சமயம் அம்மரத்தின்மே லிருந்து, ஸ்ரீராமா ஸ்ரீராமா என்னும் மொழிகள் ஸீதையின் செவியிலே விழுந்தன. அவள் அம்மொழிகளைக் கேட்டதும் ஆச்சரிய மடைந்து தன் யத்தனத்தை நிறுத்தி விட்டு உயர நிமிர்ந்து சத்தம் வந்த பக்கம் திரும்பிப் பார்த்தாள். அங்கொரு கிளையில் ஒரு குரங்கு உட்கார்ந்திருக்கக் கண்டு தன் நாத னைச் சிந்தித்தாள். இப்பொழுது அந்தக் குரங்கு கிளையி லிருந்து மள மளவென்று கீழே இறங்கி வந்து ஸீதையின் முன் நின்று, "நான் ஸ்ரீராமச்சந்திர பிரபுவின் தூதன்! எங்களிறைவனாகிய ஸுக்ரீவ மகாராஜன் அனுப்ப இங்கு வந்தவன்" என்றான். ஸீதை முதலில் "ஓ இது இரா வணனுடைய வஞ்சகமா யிருக்குமோ?" என்று சந்தேகித் தாள். பிறகு "யாராயிருந்தாலுமென்ன? என் நாத னுடைய திருநாமத்தைச் சொல்லி எனக்கு என் உயிரைத் தந்தானல்லவா? ஆகலின் இவன் விசாரிப்பதற்குரியவன்" என்று எண்ணி, "நீ ஸ்ரீராமச்சந்திரனுடைய தூதனென் பது உண்மைதானா?" என்று குரங்கைப் பார்த்துக் கேட் டாள். மாருதி "அம்மணி! இது ஸத்தியமான பேச்சு! இதோ பாரும் அதற்கடையாளம்" என்று சொல்லித் தன் மடியிலிருந்த ஒரு கணையாழியை எடுத்துக் கொடுத்தான். ஸீதை அதைத் தன் கையில் வாங்கிப்பார்த்து அது தன் கணவனுடைய கணையாழியாய் இருக்கக் கண்டு மனங் குளிர்ந்து துயரமொழிந்து அதைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, "ஐயா என்னுயிர் நாதன் எங்கிருக்கின்றார்? இப்போது அவரும் என்கொழுந்தனாரும் சுகமாயிருக்கிறார் களா? அவருக்கு உம்முடைய நட்பு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள். ஹநுமான், "அம்மணி! ஸ்ரீராமபிரான் உம்மை விட்டுப் பிரிந்த துக்கத்தால் தமது தம்பியுடன்

காடு காடாய் அலைந்து உம்மைத் தேடி வருகையில் கிஷ்கிந்தைக்கு அருகில் ரிசியமூக பர்வதச்சாரலில் எங்களரசனாகிய ஸுக்ரீவனோடு நட்புக்கொண்டார். அவர் உம்மைத் தேடி வரும்படி வானரவீரர்களை நெடுகிலும் அனுப்பி யிருக்கின்றார். நான் அவர் மந்திரி. நான் அவராணைப்படி ஸ்ரீராமபிரானிடம் உமக்கடையாளம் கேட்டு வாங்கிக்கொண்டு நெடுங்காலம் தேடித் தேடி யலைந்து கடைசியில் இங்கே வந்து இச்சமயத்திலே கண்டேன். நான் போய் அவருக்குச் செய்தி தெரிவித்தவுடன் அவர் இங்குவந்து இக்கொடிய இராவணனைக்கொன்று உம்மை மீட்டுக்கொண்டு போவார். நீர் சிறிதும் ஸந்தேகப்படவேண்டாம்" என்றான்.

5. ஸீதை இதைக்கேட்டதும் மிகவும் ஸந்தோஷமடைந்து முகமலர்ச்சியுடன் "நல்லது! என்பிறவி பயனெய்தியது! கடவுளின் திருவருள் எனக்கும் இருக்கிறதென்பது கண்டேன்" என்று கூறி உடனே "ஐயனே! நான் இன்னும் ஒரு மாதம்வரையிலே தான் உயிரோ டிருப்பேன். அதற்குள் என் நாதன் இங்கு வராவிட்டால் நான் உயிர் பிழைத்திருக்க மாட்டேன். இராவணன் அதுவரையில் கெடு விட்டிருக்கிறான்" என்று கூறி அழுதாள். ஹநுமான் "வருந்தவேண்டாம். இனி உமக்குக் கஷ்டம் ஏது? நல்லகாலம் வந்துவிட்டது. நீர் இங்குக் காண்பதுபோல் நான் ஓர் அற்பமான குரங்கல்ல. நான் இக்கணமே வேண்டுமானாலும் உம்மைக் கொண்டுபோய் ஸ்ரீராமபிரானிடம் சேர்த்து விடுவேன். நீர் என் முதுகில் ஏறிக்கொள்ளும்" என்றான்.

6. ஸீதை "ஓ இவன் எப்படியானாலும் அன்னியன்! இவன்மேல் நாமேறிக்கொள்வது தகாததாகும்" என்று கருதி "தாம் என்னிடம் காட்டும் அன்பிற்காக நான் மகிழ்

கின்றேன்! தம்மோடு வருவது சரியல்ல. ஆகையினால் விரைந்து சென்று என் நாதனை இங்கே எவ்வளவு சீக்கிரமாய் அனுப்பமுடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அனுப்பும்" என்றாள். ஹநுமான் "அப்படியே செய்கிறேன். இன்னும் ஏதேனும் செய்தியுண்டோ?" என்று கேட்டான். ஸீதை தன் சூடாமணியை எடுத்து ஹநுமான் கரத்திலளித்து "இதை என் நாதனுக்கு அடையாளமாகத் தந்து விரைவில் வந்து மீட்டுக்கொண்டு போகும்படி செய்யும். உமக்குப் புண்யமும் புகழும் பெருகும்" என்று வாழ்த்தி யனுப்பினாள்.

7. இப்படி இலங்கையிலிருந்து புறப்பட்ட மாருதி பெரு மகிழ்ச்சியுடன் ஸ்ரீராமச்சந்திரனிடம் வந்து சூடாமணியைக் கொடுத்துத் தொழுது செய்தி கூறினான். உடனே ஸ்ரீராமச்சந்திரன் ஸீதையை மீட்கத் திருவுளங்கொண்டு மாருதி முதலிய சேனாதிபதியுடனும் வானரப் படைகளுடனும் புறப்பட்டுக் கடலில் வாராவதி கட்டிக் கடலைக்கடந்து இலங்கை வந்து இராவணனை எதிர்த்துப் போர் புரிந்து அவனைக்கொன்று அவன் வம்சத்தையும் நாசம் செய்தான். அவன் தம்பியாகிய விபீஷணனுக்கு இலங்கையைக் கொடுத்தான். அப்பால் ஸீதையைத் தன்னிருப்பிடத்திற்கு ஒரு பல்லக்கில் வரவழைத்தான். ஸீதை பல்லக்கிலிருந்து இறங்கியதும் தன் நாயகனை வணங்கி நின்றாள்.

8. ஸ்ரீராமச்சந்திரன் இப்பொழுது ஸந்தோஷமாக அவளை ஏற்றுக்கொள்வதற்கு மாறாகக் கையில் வில்லையேந்தியவாறே ஒரு பார்வையுடன் நின்றான்! அதைக்கண்ட ஸீதை பெருந்துயரடைந்து, "அந்தோ இதென்ன விப

ரீதம்! இதென்ன கொடுமை! இன்னுங் கஷ்டமா? எதற்கோ இந்தப்பார்வை!" என்று எண்ணித் துக்கங் கொண்டு பெருமூச்செறிந்து கண்ணீர் விட்டாள்! ஒன்றும் பேச வாயெழாமல் நின்றாள்.

9. இப்பொழுது ஸ்ரீராமன் "ஸீதே, உன்னை அரக்கனெடுத்துச் சென்றானல்லவா? அவனிடமிருந்து உன்னை விடுவித்து என் வீரத்தைக் காத்துக்கொண்டேன். நீ இனி எங்கே வேண்டுமானாலும் போகலாம். பிறரிடமிருந்த உன்னை எற்றுக்கொள்ள எனக்கு விருப்பமில்லை. அவ்வாறு ஏற்றுக்கொள்வதும் சரியல்ல" என்றான். ஸீதை "ஓ இதனினும் கொடிய காலமுண்டோ? இப்படிப்பட்ட எண்ணம் என்னிடம் இவருக்கு உண்டாகக் காரணம் தெரியவில்லையே" என்றெண்ணி ஸ்ரீராமச்சந்திரனைப் பார்த்து "தாங்கள் இப்படிப்பட்ட எண்ணம் என்னிடம் கொள்ளக் காரணமென்ன? என்னை உலகத்திலுள்ள மற்ற மாதர்களைப்போல் நினைத்து விட்டீர்கள்போ லிருக்கிறது. நான் குற்றமற்ற செய்கை யுடையவள் என்பதைத் தாங்கள் அறிந்திருந்தும் இப்படி என்னை விலக்கத் துணிந்ததேன்? இராவணன் என்னைத் தீண்டியதும், நான் அவனிட மிருந்ததும் நானாகச் செய்துகொண்ட செய்கைகளா? நான் எந்தக் கஷ்ட காலத்திலும் தங்களை மறந்த தில்லையே! இவ்வளவு காலம் என்னுடன் பழகிய தாமே என்னிடம் சந்தேகங் கொண்டு விலக்கும்போது நானேன் இங்கிருக்கவேண்டும்?" என்று கூறி லக்ஷ்மணனைப் பார்த்து "ஐயா இச்சமயம் எல்லோராலும் கைவிடப்பட்ட என்மீதிரக்கங்கொண்டு இங்கு ஒரு குழிதோண்டி அதில் தீ வளர்த்தக்கடவீர்! நான் அந்தத் தீயில் உங்கள் முன்னிலையில் விழுந்து இறந்து

என் துன்பத்தையும் அவமானத்தையும் தீர்த்துக்கொள்கிறேன்!'' என்றாள். லக்ஷ்மணன் சொல்ல முடியாத துயரத்துடன் அக்நி குண்டம் ஏற்படுத்தினான்.

10. ஸீதை இருகரங்களையும் குவித்துக்கொண்டு அக்நியின் முன்னே வந்து நின்றாள். எல்லோரும் ஆ! ஆ! என்று கத்திக்கொண்டு கண்ணீருகுத்தனர். ஸீதை வெகு தைரியத்துடன் அக்நியின்முன் நின்றபடியே, அக்நிபகவானைத் துதித்து, "கடவுளே நான் என் கணவனையே தெய்வமாகக் கொண்டு வழிபட்டதும், அவரைத் தவிர வேறொருவரைக் கருதாமலிருந்ததும், அவரையே கதியாகக் கொண்டு உலகத்தில் வேறு எப்பொருளையும் பொருட்படுத்தாமலிருந்ததும் உண்மையாயின், அவ்வுண்மையை நீ அவர் கட்குக்காட்ட வேண்டும். இதோ உன்னை அடைகின்றேன்,'' என்று கூறி அக்நி குண்டத்தில் குதித்தாள்! என்ன சொல்வது இந்தக் காட்சியைப் பற்றி! ஸீதை கை குவித்துக் கொண்டு குதித்தபடியே முகமலர்ச்சியுடன் நிற்கின்றாள்! நெருப்பு, பக்கத்திலிருப்பவர்களையும் பற்றிக் குண்டத்திற்கு இழுப்பதுபோல் கொழுந்துவிட் டெரிகின்றது! ஸீதை அதனடுவே சிறிதும் வாட்டமின்றி விளங்குவதை எல்லோரும் கண்டு மூக்கில் கை வைத்துக்கொண்டு நின்றார்கள்! ஸ்ரீராமச்சந்திரனும் வில்லைக் கீழே ஊன்றியவாறே பெருவியப்புடன் நின்றான்.

11. இப்படியிருக்கையில், "ஸீதை மாசற்றபதிவிரதை! நாயகனையன்றி வேறொருவரையும் இச்சியாதவள்! இவளிடம் குற்றம் நினைப்பது தகுதியல்ல! இவள் இந்தத் தீயையும் வென்று ஒருவிதமான வாட்டமுமின்றி நிற்பதை நோக்கும் எவரும் இவள் பரிசுத்தமானவள் என்பதை ஒப்புக்கொள்

ளாமலிரார். ஆதலின் இவள் ஏற்றுக்கொள்ளத் தக்கவளே'' என்னும் பேச்சுகள் அந்த அக்நியினின்றும் வெளிப்பட்டன.

12. இந்தப் பேச்சைக்கேட்ட ஸ்ரீராமச்சந்திரன் புளகாங்கிதமடைந்து பெரிய ஆச்சரியத்துடனும் மகிழ்ச்சியுடனும் வில்லை யெறிந்து விட்டு ஸீதையினிடம் ஓடி அவளைக் கட்டித் தழுவிக்கொண்டு "கண்மணி! உன் பெருமையை உணர்ந்தேன். உன் பெருமையை இதற்கு முன்பும் நான் அறிவேனாதலால் உன் மீது உண்மையில் சந்தேகங்கொள்ளவில்லை. உன்னை உடனே நான் ஏற்றுக்கொண் டிருப்பின் ஜனங்கள் குறை கூறுவார்களே என்றஞ்சி உன் கற்பை இவ்வாறு எல்லோருக்கும் விளக்கினேன். என் மீது கோபங் கொள்ளாதே!" என்று கூறி ஏற்றுக்கொண்டான்.

13. ஸீதை தன்னுடைய சகல துக்கங்களையும் மறந்து பெருமகிழ்ச்சி அடைந்தாள். ஸ்ரீராமச்சந்திரனையும் குற்றமற்ற ஸீதையையும் இந்நிலையில் பார்க்கும் பாக்கியம் பெற்றோரனைவரும் கரைகடந்த களிப்படைந்தார்கள் !

14. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் எல்லோருடனும் புறப்பட்டுக் கடலைக்கடந்து அயோத்திக்கு வந்தான். அயோத்தியில் வெகு வைபவங்களுடன் ஸ்ரீராமச்சந்திரனுக்கும் ஸீதா தேவிக்கும் பட்டாபிஷேகம் நடந்தது. பிறகு ஸீதையும் ஸ்ரீராமச்சந்திரனும் தங்கள் வாழ்வை உலகம் புகழ வெகு சிறப்பாக நடத்திவந்தார்கள். ஸீதை தன் நாயகனிடத்தில் மாத்திரமல்லாமல் மற்றும் மாமியார், கொழுந்தன்மார் முதலிய எல்லோரிடத்திலும் தான் நடந்து கொள்ளவேண்டிய மரியாதை தவறாமல் நடந்து வந்தாள். ஜனங்களெல்லோரும், "ஸீதையே நல்ல மனைவி ஸீதையே கற்புக்கு தெய்வம்! ஸீதையே இவ்வுலகத்திலுள்ள பெண்

களுக்கெல்லாம் குரு" என்று புகழ்ந்து கூறி அவளை வாழ்த்தினார்கள்! உலக மெல்லாம் புகழ்ந்து மகிழ்ந்தது! இன்னும் மகிழ்கின்றது; இனி என்றும் ஸீதையை மறவாமல் உலகம் போற்றும் என்பதிலும் ஐயமில்லை.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

# பரதன்

## நல்ல தம்பி

### அத்தியாயம் 1.

---

பரதனும் அவன் தாயும்

ஸ்ரீராமச்சந்திரனுடைய தம்பிமார் மூவரில் பரதன் என்பவன் ஒருவன் என்பதை நாம் படித்திருக்கின்றோம். இவன் தசரத மகாராஜனுடைய இளைய மனைவி கைகேயின் மகனல்லவா? நல்ல பிள்ளையும் மூத்தவனுமாகிய ஸ்ரீராமச்சந்திரனைக் காட்டுக்கோட்டிய கைகேயியின் மகனுயிருந்தபோதிலும் பரதன் எல்லோரும் புகழத்தக்க சிறந்த குணங்களுடன் விளங்கினான். ஸ்ரீராமச்சந்திரனுக்குப் பட்டாபிஷேகம் நடத்த நிச்சயித்தபொழுது பரதன், சத்ருக்நனுடன் கேகய நாட்டுக்குப் போயிருந்தானல்லவா!

2. ஸ்ரீராமச்சந்திரன் தன் தந்தையின் கட்டளையின் படி காட்டுக்குச் சென்றபிறகு பரதன் சத்ருக்நனோடு அயோத்திக்கு வந்தான். ஸ்ரீராமச்சந்திரன் காட்டுக்குச் சென்றான் என்ற செய்தி செவியில் விழுந்ததும் தசரத மகா

ராஜன் இறந்து விட்டமையால் அயோத்தி இப்பொழுது சந்திரனில்லாத வானம் போலிருந்தது. குடிகளெல்லாம் பெருந்துயர மடைந்தமையால் அயோத்தி இப்பொழுது ஒரு பாழ் நகரம் போலிருந்தது.

3. நகரம் இந்நிலைமையிலிருக்கக் கண்ட பரதன் பெரு வியப்பும் பயமுமடைந்து, "இது அயோத்திதானா? அரசனிருந்தரசாளும் நகர மிதுவா? இங்கென்ன விபரீதம் நேரிட்டதோ தெரியவில்லையே!" என்று தம்பியுடன் பேசிக் கொண்டே அரண்மனைக்குள் பிரவேசித்தான். அரண்மனை வெறுமனையாய் இருந்தது. ஒரு பாழ்மண்டபம்போ லிருந்தது! என்ன செய்வான் பரதன்! கண்டதும் "அந்தோ! இதற்குக் காரணமென்ன?" என்றெண்ணித் திகைத்து நின்றான்; இங்குமங்கும் போய்த் தந்தையைத் தேடிப்பார்த்தான். பரலோகஞ்சென்ற தந்தையை இவன் இங்கெப்படிக் காண்பான்? காணாமல் பலபடி எண்ணிக் கொண்டே கைகேயியினுடைய அரண்மனை சென்றான். கைகேயி, மகனைக்கண்டதும், "அப்பா குழந்தாய், வா!" என்று முக மலர்ச்சியுடன் வரவேற்றாள்; "உன் பாட்டனாரும் உன் மாமனும் சுகமா?" என்று கேட்டாள். பரதன், தாயைப்பணிந்து எழுந்து நின்று, "யாவரும் சுகமாயிருக்கின்றார்கள். என் தந்தை யெங்கே? அவரைக்கண்டு பணிந்து ஆசீர்வாதம் பெறவேண்டும்" என்றான். கைகேயி, சிறிதும் தயங்காமல், "பரதா! உன் தந்தை பரலோகம் சென்றார்! நீ வருந்தாதே!" என்று அவனுக்கு விருப்பமானதைப் பேசுவதுபோல் சொன்னாள். பரதன், இச்செய்தி கேட்டதும் இடிவிழுந்த மரம் பூமியில் விழுவது போல் அங்கேயே விழுந்து உணர்ச்சியும் மூச்சுமில்லாதவனானான். பின் கொஞ்ச நேரத்தில் எழுந்து "ஆ நான் அழிந்தேன்!" என்று கூறி யழுதான்.

கைகேயி, அவனுக்குத் தேறுதல் கூறினாள். பரதன் தன் தாயைக் கண்களிலே கண்ணீர் பெருக நின்று பார்த்து, "அம்மா! தந்தை என் அண்ணாவுக்குப் பட்டங்கட்டி வைப்பார் என்று எண்ணியிருந்தேனே! அந்த எண்ணம் வீணாயிற்றே! தந்தை இறந்ததன் காரணமென்ன? நான் இங்கு வந்து தவிப்பதை என் அண்ணாவுக்குத் தெரிவியுங்கள். அவருக்கு நான் அன்பான அடிமையல்லவா? அவரெங்கே இருக்கின்றார்? அவர் எனக்குத் தந்தையல்லவா? என் தந்தையும், தாயும், என் கர்த்தாவும் தமையனுமாகிய அவரைக் கண்டு பணிந்தபொழுது தான் என்னுடைய இந்தத்துயரம் தீரும்! அவரெங்கே? இறக்கும்போது தந்தை என்ன சொன்னார்?" என்று கேட்டான்.

4. கைகேயி, "பரதா, உன் தந்தை "ஆ ராமா; லக்ஷ்மணா!" என்று புலம்பிக்கொண்டே உயிர் விட்டார்; 'ஸீதையுடன் வருகிற ஸ்ரீராம லக்ஷ்மணர்களைப் பார்ப்பவர்களே பாக்கியசாலிகள்' என்று கூறினார்" என்றாள். இதைக் கேட்டதும் பரதன் பெருந் துயரமடைந்து, "அம்மா! அவர்கள் மூவரும் எங்கே?" என்று கேட்டான். கைகேயி, "பரதா, அவர்கள் மூவரும் காட்டுக்குச் சென்றார்கள்!" என்று வெகு துணிவாய்ச் சொன்னாள். பரதன், "அவர்கள் காட்டுக்குச் செல்ல வேண்டிய காரணமென்ன? அண்ணா குற்றமற்றவர்; எவருக்கேனும் தீங்கு செய்தாரா?" என்று கேட்டான். கைகேயி, "பரதா! உன் அண்ணா நீ நினைக்கிறபடி ஒரு குற்றமும் செய்யவில்லை. அவனுக்குப் பட்டங் கட்ட உன் தந்தை நிச்சயித்தார். அப்பொழுது நான் அதைத் தடுத்து உனக்கு அரசைக் கொடுக்கவும் அவனைக் காட்டுக் கனுப்பவும் உன் தந்தையிடம் வரங்கேட்டேன். அவர் முன் ஒரு சமயம் எனக்குச் செய்திருந்த வாக்குத் தத்தத்திற்

குக் கட்டுப்பட்டு அவ்வாறே செய்தார். ஸ்ரீராமனைப் பிரிந்த துயரத்தால் உன் தந்தை உயிரை விட்டார். உனக்காக நான் இந்த அரசை இவ்வளவு கஷ்டப்பட்டுத் தேடியிருக்கிறேன். இதை நீ ஏற்றுக்கொள். துயரப்படாதே" என்றாள்.

5. இக்கொடிய சொற்களைக் கேட்கும்போதே, பரதன் தன்னுடைய இரண்டு கைகளாலும் இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டான்; தீப்பொறி பறக்கப் பெருமூச்சு விட்டான். அவனுடைய புருவங்கள் துடித்தன. கண்கள் நெருப்பைப்போல் சிவந்தன. வாயிதழ்கள் அடிக்கொருதரம் மடிப்புண்டன. இந்நிலையை யடைந்த பரதன் செவிகளைப் பொத்திக்கொண்டிருந்த தன் இருகரங்களையும் சேர்த்துக் கொட்டி, அந்தோ! என்று கத்தினன்! உடனே அவன் கைகேயியை விழித்துப் பார்த்து "நான் பெரிய பாவி! தந்தையையும் என் தந்தைக்கு ஒப்பான தமையனையும் இழந்தேன்! இப்படிப்பட்ட எனக்கு இராஜ்யம் வேறு வேண்டுமோ? — உன்னாலே தான் என் தந்தை இறந்தார். தந்தையை இப்படிக் கொன்றதனால் நீ அடைந்த பயன் என்ன? உன்னைத் தம்முடைய அன்னையைப்போ லெண்ணி அன்பு பாராட்டி வந்த என் அண்ணாவைக் காட்டுக் கோட்டிய நீ அதன்பொருட்டுக் கொஞ்சமும் துயரப்படுவதாகத் தெரியவில்லையே! நான் என் அண்ணாவிடம் எப்படிப்பட்ட மனமுடையவன் என்பதை அறியவில்லையே! நீ எனக்கு இராஜ்யம் தேடி வைத்திருப்பது, ஓர் எருது சுமக்க வேண்டிய சுமையை ஓர் இளங்கன்றின் மீது வைக்கப் பார்த்ததற்கு ஒப்பாயிருக்கிறது. எனக்கு இராஜ்யத்தை ஆள வல்லமையுண்டு. இருப்பினும் நீ உன் மகனென்கிற சுயநலங்கருதிச் செய்த இக்காரியத்திற்கு நான்

உடன்பட மாட்டேன்! இந்தக் கெட்ட எண்ணம் உனக்கெப்படி வந்தது? இராஜ நீதிப்படி மூத்தவனுக்குத்தானே இராஜ்யம்? நீ செய்த இந்தச் செய்கையினால் எங்களுடைய மரபின் பெருமை கெட்டது! நீ எனக்கு இன்பந் தருமென்று எண்ணிச்செய்த செய்கை எனக்குப் பெருந் துன்பங்கொடுத்து என்னைக் கொல்லுகின்றது! நான் உன் விருப்பத்தை நிறைவேற்றவே மாட்டேன்! என் அண்ணாவைப் போய் அழைத்துவந்து அவருடைய திருவடிபணிந்து நான் அவர்க்கு அடிமை யாவேன்! அடி கொடியவளே! பாதகியே! இந்த இராஜ்யத்தை விட்டே நீ ஓடி விடு! உன் பிள்ளை பரதன் இறந்து விட்டதாக எண்ணிவிடு! என் அண்ணா காடேகியதும் என் தந்தை வானேகியதும் உன் வஞ்சனையினாலல்லவா? இதை அறிந்தும் நான் உன் வாயைக் கிழிக்காமல் சும்மா இருக்கிறேனல்லவா? இதுவே நான் இராஜ்யத்தை ஆசையுடனடைவதற்குச் சமானமாயிற்று! நீ இன்னும் இறவாமலிருக்கின்றாய்! நானும் இன்னும் இறவாமலிருக்கிறேன்! இதோ இந்த நிமிஷத்தில் உன்னைக் கொன்று விடுவேன்! ஏன் உன்னைக் கொல்லவில்லை தெரியுமா? என் அண்ணா கோபம் கொள்வாரென்றே நான் அஞ்சி நிற்கின்றேன்! தாயென்கிற எண்ணங் கொண்டல்ல. ஒப்புயர்வற்ற சூரியகுலத்தின் பெருமையைத் தாயின் பேச்சைக்கேட்டுப் பாவி பரதன் கெடுத்து விட்டான் என்னும் பழியைத் தேடிக்கொண்ட எனக்கு இராஜ்யம் வேறு வேண்டுமா? அடி பாவி! ஸத்தியத்திற்குக் கட்டுப்பட்டு ஓர் அரசனிறந்தான். அவன் பேச்சைத் தட்டலாகாதென்று ஒருவீரன் காடேகினான். அப்படியிருக்க அரசையாள, பாவி பரதன் வந்தான் என்றால் இதனைப்பார்க்கிலும் இழிவுண்டோ? இந்தக் கொடிய செய்கையைத் துணிந்து

செய்த நீ இன்னும் என்ன செய்யக் காத்துக்கொண் டிருக்கிருயோ தெரியவில்லை, நீ பெண்ணல்ல! பேய்! பெற்று வளர்த்த பிள்ளைக்குப் பெரிய பழியைத் தேடிய பாதகி நீ! உன்வயிற்றிலே பிறந்த பாதகமும் என்னுடைய துயரமும் நீங்க நான் தவத்தை மேற்கொள்கின்றேன்; என் தமையனுக்கும் தந்தைக்கும் ஒத்த ஊழியஞ் செய்து அதனுலே புகழ்பெறுகின்றேன். இந்தக் கொடிய பாவச்சுமையை இனி நான் சுமக்க மாட்டேன்! நீ இறந்துவிடு! அப்பொழுதுதான் நீ பாவத்திலிருந்து நீங்குவாய்!"—என்று கூறி அழுதுகொண்டே தரையில் விழுந்து தீயிலேவிழுந்த புழுவைப்போல் துடித்தான்.

---

## அத்தியாயம் 2.

### பரதன் அரசை வெறுத்தல்.

பரதன் இப்படிக் கிடக்கும் செய்தி அறிந்த அமைச்சர்கள் அங்கு வந்து கூடிப் பரிதாபப்பட்டனர். பரதன் அவர்களை நோக்கி, "நான் ஒருபோதும் அரசையடைய விரும்பியதில்லை. என் தாயோடு இதற்காக நான் ஓர் ஆலோசனையும் செய்ததில்லை!" என்று சொல்லிப் புலம்பினுன்; பிறகு எழுந்து, "நான் என்னுடைய பெரிய அண்ணையைப் பார்க்கப் போகின்றேன்! இந்தப் பாவியின் முன்னே ஒரு நிமிஷமும் இனி நான் இருக்கமாட்டேன்" என்று கூறி ஓடினுன். பரதன் வந்த செய்தி அறிந்த கௌஸல்யை அவனைக்காண எண்ணி இப்பொழுது இங்கே வந்தாள். அவள் பரதனைக் கண்டதும், "அப்பா! பரதா, உன் எண்ணம் நிறைவேறிவிட்டது? ஸ்ரீராமனைக் காட்டிற்கு அனுப்பிக் கைகேயி பெரிய பயனை அடைந்திருக்

கிறாள்! ஸ்ரீராமன் எங்கே இருக்கின்றானோ அங்கே கொண்டுபோய் என்னையும் விட்டுவிடு" என்று படபடப்போடு கூறினாள்!

2. பரதன் இப்பொழுது சொல்லமுடியாத துயரமடைந்து வாய்விட்டலறிக்கொண்டே கீழே விழுந்து, பிறகு எழுந்து கௌஸல்யையின் முன் கரங்குவித்துக்கொண்டு நின்று, "அம்மா! என்மீது வருத்தப்பட வேண்டாம், என்னை நிந்திக்கவேண்டாம். நானொன்றையும் அறியேன்! நான் குற்றமற்றவன்; நான் தந்தையைக் காணும் பாக்கியமில்லாத பாவியானேன். அண்ணாவை நீரேன் தடுக்கவில்லை? நான் கொடியவளுடைய வயிற்றிலே பிறந்த கள்வனானேன்; இந்தப்பழிதீர இப்பொழுதே இறக்கின்றேன்!" என்று கூறிக் கண்ணீர் விட்டான்.

3. கௌஸல்யை பரதன் குற்றமற்றவன் என்பதை உணர்ந்து, "அப்பா! நீ உன் அன்னை செய்த வஞ்சனையை அறியாயோ?" என்று கேட்டாள். பரதன் இச்சொற்கேட்டதும் விம்மி விம்மி அழுதுகொண்டே கூறுகிறான்:—

ஸத்தியந் தவறாதவராகிய ஸ்ரீராமபிரான் காடேக உடன்பட் டிருந்தவன், எனனுக்கு அடிமைப்பட்டவன் அடையக்கூடிய பாபத்தை அடையக் கடவன்; சூரியனுக்கு முன்னே மலமூத்திரங்களைக் கழித்த பாபத்தை அடையக் கடவன்; ராஜத்துரோகம் செய்த பாபத்தை அடையக் கடவன்; கூலிக்காரனுக்குக் கூலி கொடாத பாபத்தை அடையக்கடவன்; குருவை அவமதித்த பாபத்தைப் பெறக்கடவன்; செய்த நன்றியை மறந்தவன், நன்றி செய்யாதவன் இவர்களடையும் பாபத்தை அடையக்கடவன்; அன்னை தந்தையரை ஆதரியாத பாபத்தை அடையக்கடவன்; தருமந் தவறாதவராகிய

ஸ்ரீராமச்சந்திரன் வனம்போகச் சம்மதித்தவன் கள்ளைக் குடித்தும் கவருடியும் அழியக்கடவன். அவன் காலை மாலை இரண்டு வேளைகளிலும் தூங்குகிறவன் அடையத் தக்க பாபத்தை அடையக்கடவன்; எல்லோரிடத்திலும் கோபங்கொள்ளுகிறவன், பெரியவர்களுக்குத் தீங்கு செய்பவன், தன் அன்னை பசித்திருக்கத் தன்வயிறு நிரப்பிக் கொள்பவன் இப்படிப்பட்டவர்கள் விழத்தக்க கொடு நரகத்திலே விழக்கடவன்; கட்குடியன் பொய்ச்சாட்சி சொன்னவன், கன்றுக்குட்டிக்குப் பால்விடாமல் கறந்தவன், வட்டிக்கு வட்டி கட்டி வாங்கும் தீயன், அயலார் பொருளை அபகரித்தவன், இரப்பவர்க்குத் தன்னாலியன்றதை உதவாதவன் இன்னோர் எந்த நரகத்தில் விழுவார்களோ அந்த நரகத்தில் விழக்கடவன்—என்று கூறி ஆ! ஆ! அண்ணா! அண்ணா! என்றலறிக் கீழே விழுந்தான்.

4. இப்படிப்பட்ட சபதஞ்செய்து விழுந்த பரதனிடம் கௌஸல்யை அநுதாபமடைந்தாள்; அவன் குற்றமற்றவனெனத்தெரிந்து கொண்டாள்; ஆகையால் பரதனை அன்போடுபார்த்து, "கண்ணே! நீ இப்படிச் சபதஞ் செய்தது என் மனத்தை வருத்துகின்றது. நீ விசனப் படாதே! நடந்ததைப்பற்றி எண்ணாதே! உன் தந்தை இறந்து பதினான்கு நாட்களாயின: அவருக்குச் செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்! கலங்காதே!" என்று கூறிக் கண்ணீர் பெருக்கினாள். பரதனும் புலம்பி அழுது துயரப் பட்டான்.

5. அப்பால், பரதன் தன் தந்தைக்குச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்து முடித்து ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டு பணிந்து அவனை நகரத்துக்கு அழைத்து வரு

வதன் பொருட்டுச் சத்ருக்நனுடன் காட்டுக்குப் புறப்பட்டான். அப்பொழுது வஸிஷ்டர், ஸுமந்திரன், இன்னுமுள்ள பெரியோர் அனைவரும், பரதனைச் சபைக்கழைத்து இராஜ்யத்தை ஏற்றுக்கொண்டு, அரசுபுரியும்படி பல நியாயங்கள் கூறிக் கட்டாயப்படுத்தினர்! அப்பொழுது பரதன் மிகவும் துயரமடைந்தான்; மயங்கினான். அவன் கண்களிலிருந்து நீர் பெருகி முத்துக்களைப்போல் உதிர்ந்தது. என்ன செய்வான் அவன்; குலகுருவின் முகத்தைப் பார்த்தான்; கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தான்; அப்பால், "ஐயா மூன்று உலகத்திற்கும் முதல்வனாகத் தோன்றிய ஸ்ரீராமபிரானிருக்க நான் எப்படி மகுடஞ் சூடுதல் கூடும்? அவரை நான் இந்த இராஜ்யத்திலிருந்து எப்படி விலக்குவேன்? மூத்தவனிருக்க நான் அரசாள்வது ஒழுங்காகுமா? இதுவரையில் அப்படி யாரேனும் செய்ததுண்டா? நான் இந்த இராஜ்யத்தைப் பெறுவேனானால் அது எங்கள் குலத்திற்குப் பெரிய இழிவல்லவா?—என் அன்னை செய்த கொடிய செய்கைக்கு நான் உடன்படேன். நான் இனி உயிருடனிருக்கவும் மாட்டேன். பெரியவராகிய ஸ்ரீராமபிரானே இவ்வரசுக்கு அரசர். அவரை இங்கிருந்தே கும்பிடுகின்றேன்" என்று கூறிக் கைகூப்பிக் கும்பிட்டு ஸ்ரீராமனைத் தியானித்தான்.

6. இப்பொழுது சபையிலிருந்தவர்கள் பரதனைப் புகழ்ந்தனர். பரதன், நான் ஸ்ரீராமபிரானைக் காட்டிலிருந்து இங்கழைத்துவராமல் போவேனானால், நானும் அந்த லக்ஷ்மணனைப் போல் வனத்திலேயே வசிப்பேன். எல்லோரும் எனக்கு விடை தரவேண்டும். நான் இப்போதே காட்டுக்குச் செல்கின்றேன்" என்றான்.

7. பரதனுடைய இந்த நியாயமான வழியைக் கண்டு மகிழ்ந்து எல்லோரும் அதைப்பாராட்டி, "ஸ்ரீராமச்சந்திரன் தந்தையிருக்கும்போது நீ மகுடஞ் சூடுவதை ஒப்புக்கொண்டான். நீ இவ்வரசை மறுக்கின்றாய்! உன்னைப் போன்ற அரசிளங்குமரர்கள் யாவரிருக்கின்றனர்? உன் புகழ் எக்காலததிலும் உள்ளதாகும். நீ சுகமே போய் உன் அண்ணாவை அழைத்துவா" என்று அவனுக்கு விடைகொடுத்தனர். பரதன் உடனே படைக்கல வீரர்கள் பலர் புடைசூழக் காட்டுக்குப் புறப்பட்டான். அவனோடு ஸுமித்திரை, கைகேயி, கௌஸல்யை, வஸிஷ்டர், ஸுமந்திரன் முதலிய யாவரும் புறப்பட்டார்கள். இன்னும் நகரத்தார் பலரும் ஸ்ரீராமபிரானைத் தரிசிக்கப் புறப்பட்டனர்.

---

## அத்தியாயம் 3.

### பரதன் காட்டுக்குச் செல்வது.

இவ்வாறு புறப்பட்ட பரதன், நகரத்தைக் கடந்து காட்டுக்குவந்து சிருங்கபேரபுரத்தை அடைந்து, அங்கே தங்கினன். இது குகன் என்னும் வேடராஜனிருந்துவரும் இடமல்லவா? பரதன் இங்கு இவ்வாறு பெருஞ் சேனைகளுடன் வந்து தங்கிக் கூடாரங்களடித்திருப்பதைக்கண்ட குகன், "ஓ இவன் பரதனைத்தான் இருக்க வேண்டும். அவன் இரதத்திலே அத்திக் கொடி கட்டியிருக்கிறது. இவன் நம்மைக் கட்டிக்கொண்டு போனாலும் கொண்டுபோவான், அல்லது கொன்றாலும் கொன்று விடுவான், இவன் ஸ்ரீராமச் சந்திர பிரபுவை எதிர்த்து அவரை ஒழித்துவிடுவதென்று தீர்மானங்கொண்டு படையெடுத்து வந்திருக்கிறான் என்று தெரிகிறது. ஆகையினால்

நாம் இவனைக் கங்காநதி கடந்து செல்லாதபடி எதிர்க்க வேண்டும்! இவன் வஞ்சகன்!" என்று தன்னுடைய படை வீரர்களை நோக்கிக் கூறிவிட்டு முறைப்படி காணிக்கையோடு பரதனைப் பார்க்க வந்தான்.

2. குகன் வருவதைக்கண்ட ஸுமந்திரன் பரதனை நோக்கி, "குகன் நல்லவன்! ஸ்ரீராமபிரானுக்கு நண்பன்! வேடர்களுக்கு அரசன்" என்று அவனைப்பற்றித் தெரிவித்தான். பரதன், "ஓ என் அண்ணாவின் நண்பனாயின் நானே முன் சென்று இவனைக் காண்பேன்" என்று கூறி எழுந்தான். இதற்குள் குகன் அவனை நெருங்கிக் காணிக்கை தந்து பணிந்தான். தன்னை வந்து பணிந்த குகனைப் பரதன் அன்போடு உபசரித்தான்; அவனிடம் ஸ்ரீராமனிடம் கொள்ளும் அன்பு கொண்டான். பரதன் மரவுரி உடுத்திருப்பதையும் அவன்மேனி அழுக்கடைந்து முகம் ஒளி மழுங்கி இருப்பதையும் கல்லும் கனிந்துருக அவன் துயரப்படுவதையுங் கண்டு, "ஓ இவன் ஸ்ரீராமபிரானை எதிர்க்க வந்தவனல்லன்! நாம் எண்ணியது தவறு" என்று எண்ணி, பரதனை வரவேற்று அவனுக்குக் கனிகளும் காய்களும் கொண்டுவந்து கொடுத்து உபசரித்தான். பிறகு பரதனுடைய விருப்பப்படி கங்கையைக்கடந்து செல்ல ஓடம் விட்டு அவனைப் பார்த்து, "ஐயா! தாம் கெட்ட எண்ணத்துடன் ஸ்ரீராமரிடம் செல்வது கூடாது" என்றான்.

3. பரதன், "ஐயா! தாம் என்னிடம் அப்படிப்பட்ட பயங்கொள்ள வேண்டாம். பரதன் ஸ்ரீராமனுக்குத் தீங்கு செய்யும்படியான காலம் ஒருபோதும் வராது. நான் அப்படிப்பட்ட பாதகனல்லன். நான் அவரை அயோத்திக்கு அழைத்துவரவே செல்கின்றேன்" என்றான். குகன், அப்

படியாயின் உமது புகழ் ஒருநாளும் அழியாது; என்றும் இவ்வுலகத்திலே உள்ளதாகும். உமக்குச் சுகமுண்டாகும்! உமது தாயின் சொற்படி உமக்கு உமது தந்தைகொடுத்த அரசை 'இது தீமை தரத்தக்கது' என்று எண்ணி ஏற்றுக் கொள்ளாமல் துன்பத்தோடு இங்கே வந்த உமது குணம் பெரிது! ஆயிரம் ராமர் வரினும் உமக்கு ஒப்பென்று சொல்லலாமோ?" என்று கூறி மகிழ்ந்தான்.

4. இப்பொழுது அஸ்தமித்தது. பிறகு இராத்திரியாகவே, பரதன் எல்லோருடனும் படுக்கைக்குச் சென்றான். அவனுக்கு நெடுநேரம் வரையில் தூக்கமே வரவில்லை. மனச் சமாதானமும் ஏற்படவில்லை. அதனால் அவன் குகனிடம் சென்று துக்கித்தான். குகன் பற்பல நியாயங்கள் எடுத்துச்சொல்லி அவனைத் தேற்றினன்; லக்ஷ்மணன் ஸ்ரீராமனிடம் கொண்டிருக்கும் அன்பைச் சொன்னன். பரதன் அதைக் கேட்கும்போதே அவன் கண்களிலிருந்து நீர் பெருகியது! என்ன செய்வான் அவன்! துக்கம் அவனை எரிக்கின்றது. ஆகையினல், அவன், "நானேன் பிறந்தேன் இந்தப் பூமியில்? நானேன் இன்னும் உயிருடன் இருக்கிறேன்?" என்று கூறிக் கதறி அழுதான். அவனைக் கௌஸல்யை தேற்றி, "அப்பா! ஸ்ரீராமன் வனமேகியதை மறந்து உன்னை நம்பியிருக்கும் எங்கள் முன்பு நீ இப்படித் துயரப்படலாமா?" என்று சொல்ல, பரதன் தெளிந்து எழுந்து குகனைப்பார்த்து "என் அண்ணு எங்கே படுத்திருந்தார்; லக்ஷ்மணன் எங்கே நின்றுகொண்டிருந்தான்?" என்றுகேட்டான். குகன் அவர்கள் படுத்திருந்த இடத்தைக்காட்டி, "லக்ஷ்மணர் வில்லூன்றிய கரத்தோடும் பெருமூச்சோடும் கண்களில் நீர் சொரிய விடியுமளவும் கண் இமைப்பில்லாமல் இங்கே நின்றார்" என்று அவன் நின்ற இடத்தையும் காட்டினன்.

5. பரதன் அதைக்கேட்டதும் சொல்ல முடியாத துய ரமடைந்து, "ஆ என் ஐயன் சயனித்திருந்த இடமா இது? பிரபு சயனித்திருந்த இடமா இது? அற்புத மாளிகை யும் ஹம்ஸதூளிகா மஞ்சமும் போய் இந்தப் புல்தரையா என் அண்ணுவுக்குச் சயனிக்கும் இடமாக வேண்டும்?" என்று கூறி அங்கே படுத்துப் புரண்டு புலம்பியழுது பிறகு எழுந்து "அண்ணு! அண்ணு! தமக்கு என்னுலே இத்துன் பம் வந்ததென்று கேட்டேன்! கிழங்கையும் காயையும் புசித்து இந்தப் புல் தரையிலே நித்திரை செய்ததாகக் கேட் டேன். இன்னும் நான் உயிரைவிடாமல் அரசை அடைவ தற்காக இருக்கிறேனே! என்னிலும் கொடியவனுண்டோ?" என்று சொல்லியழுதான். அப்பால் லக்ஷ்மணனுடைய நல்ல குணத்தை நினைத்துக்கொண்டு மறுபடியும் கீழே விழுந்து "ஸ்ரீராமபிரானுடைய தம்பிமார்களுள் நான் தீராத் துயரம் விளைக்க உடம்பெடுத்தேன். அதைத் தீர்ப்பதற்கு லக்ஷ்மணன் இருந்தான்! என் ஐயனுக்கு இப்படிப்பட்ட துன்பங்கொடுத்த பாவியாகிய நான் இன்று முதல் தரையி லேயே படுப்பேன்; இப்பாழும் உடலைப்பற்றி இனிமேல் எண்ணமாட்டேன்; கிழங்குகளையுங்கனிகளையுமே உண்பேன். ஜடைமுடியும் மரவுரியையுமே தரிப்பேன்; நானும் சத்ருக்ந னும் இங்கேயே இருப்போம்; ஸ்ரீராமபிரான் லக்ஷ்மண னுடன் அயோத்தி சென்று அங்கு அரசுபுரிந்து வருவார். இந்த எண்ணம் நிறைவேற ஈசன் அருள் புரிய வேண்டும்" என்று எண்ணிக்கொண்டே அன்றிரவைக்கழித்தான்.

6. மறுநாள் குகன் அநேக ஓடங்களைக் கொண்டுவந்து நிறுத்தினன். பரதன் எல்லோருடனும் அவைகளில் ஏறிக் கொண்டு கங்கையைக் கடந்து அக்கரை சேர்ந்தான்.

இங்கே வந்ததும் குகன், கௌஸல்யையைக்கண்டு "இவ்வம்மையார் யார்?" என்று கேட்டான். பரதன், "நமதண்ணு ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவைப் பெற்ற மாது சிரோமணி இவர்; நான் பிறந்ததனுல் பாக்கியங்களை இழந்தவர்" என்று சொன்னுன். குகன், கௌஸல்யைக்கு வந்தனஞ் செய்து, பிறகு ஸுமித்திரையை யாரென்று கேட்டான். பரதன், "இவர், ஸ்ரீராமபிரானேடு கூடப்பிறந்தவர்களும் உண்டென்று சொல்ல, அவருடன் கூடவே சென்று அவர்க்குப் பணிவிடை செய்துவரும் லக்ஷ்மணனைப் பெற்றவர்" என்றுன். குகன் ஸந்தோஷமடைந்து ஸுமித்திரையைப் பணிந்து, பிறகு கைகேயியை யாரென்று கேட்டான். பரதன் "குலத்திற்கே பெரிய அபகீர்த்தியைக் தேடி வைத்து உலகமுழுவதும் பழிக்கும்படி செய்த பெரிய பாவி இவள்! தன் வயிற்றிலே பத்து மாதகாலமிருந்த இந்தப் பாவி பரதனுக்கும் துயரத்தைத் தேடிவைத்த கொடிய பாதகி இவள்" என்றுன். குகன் அந்த அம்மாளையும் தொழுதான்.

7. அப்பால் பரதன் எல்லோருடனும் பாத்வாஜருடைய ஆசிரமம் போய் அவரை நமஸ்கரித்து அவருடைய ஆசீர்வாதம் பெற்று ஸ்ரீ ராமச்சந்திரனிருக்கு மிடத்தை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான். உடனே "எப்பொழுது என் அண்ணுவைப் பார்ப்பேன்! எப்பொழுது அவருடைய திருவடி தொழுது என் மனமாறுவேன்" என்ற எண்ணத்துடனே அங்கிருந்து புறப்பட்டான். அப்பொழுது முனிவர், கௌஸல்யை முதலிய மூவரையும் தனித்தனியே இன்னுர் என்று அறிய விரும்பிப் பரதனைக் கேட்டார். பரதன், கௌஸல்யையைக்காட்டி "இந்தா

வாடிவருந்தித் தேவதையைப்போலிருப்பவர் புருஷோத்தம ரான ஸ்ரீ ராமரைப் பெற்ற கௌஸல்யை அம்மையார்" என்று சொன்னான். ஸுமித்திரையைக்காட்டி, "இவர் அழகும் பராக்ரமும் வாய்ந்த லக்ஷ்மணனையும் சத்ருக்னனை யும் ஈன்ற உத்தமியார்" என்றான். கைகேயியைக் காட்டி, "இவர் கோபகுணமும், அறிவீனமும், கர்வமும் கொண்ட வர். நான் என் தந்தையை இழந்ததும் அன்புறவைத் துறந்ததும் இவராலேதான்" என்று சொல்லிக் கண் கலங் கினான். முனிவர், பரதனுக்குச் சமாதானங் கூறி அவ னுக்கு விடைகொடுத்தார். பரதன், உடனே புறப்பட்டுச் சென்றான்.

---

## அத்தியாயம் 4.

### பரதன் ஸ்ரீராமனுடைய பாதுகைகளைப் பெறுவது.

பரதன் ஸ்ரீராமச்சந்திரனிருக்கும் சித்ரகூட பர்வ தத்தை நெருங்கினான். இத்தருணத்தில் ஸ்ரீராமச் சந்திரன் ஸீதாதேவிக்குச் சித்ரகூடபர்வதத்தின் சிறப்பைக் காட்டிக்கொண்டிருந்தான். ஸ்ரீராமனுடைய செவியில் பர தனுடைய சேனையால் உண்டான சத்தம் விழுந்தது. உடனே, ஸ்ரீராமச்சந்திரன் லக்ஷ்மணனை நோக்கி "இப் படிச் சத்தங்கேட்பதன் காரணமென்ன? தெரிந்து சொல்" என்று சொன்னான். லக்ஷ்மணன் ஒரு மரத்திலேறிப் பார்த்து, "அண்ணா! பரதன் படையெடுத்து வருகின்றான்; மோசம் வந்துவிட்டது!" என்று கூக்குரலிட்டுக் கோபங் கொண்டான். ஸ்ரீராமச்சந்திரன், "லக்ஷ்மணா, கோபங் கொள்ளாதே! பரதனைக் குறித்து நீ இப்படி எண்ணுவது

சரியல்ல. அவன் தருமதேவதைக்குத் தெய்வம் போன்ற வன்; நடு நிலைமை தவறாதவன். அவன் இங்கு வருவது என்னைப் பார்ப்பதற்கேயல்லாமல் வேறு வித்தியாஸமான எண்ணங்கொண்டல்ல. அவனிடம் நீ கோபங்கொள்ளாதே! அவன் இராஜ்யத்தை என்னிடம் கொடுக்க எண்ணங் கொண்டு வந்திருக்கின்றான். அவனைப் பார்த்து "பரதா! அரசை லக்ஷ்மணனுக்குக் கொடு என்று சொன்னால் அப் பொழுதே சிறிதும் சிந்தியாமல் கொடுப்பான்" என்றான். இப்படி ஸ்ரீராமச்சந்திரன் சொல்லவே லக்ஷ்மணன் கோபந் தணிந்து வேறுபேசாமல் ஸ்ரீராமனுடைய பக்கத்திலே வந்து கைகுவித்தபடி நின்று விட்டான்.

2. சித்ரகூட பர்வதத்தைப் பரதன் கண்ணாலே கண் டான். கண்டதும் தன்னோடு வந்த சேனைகளை யெல்லாம் அந்த இடத்திலேயே நிறுத்திவிட்டுத் தம்பி சத்ருக்நனுடன் ஸ்ரீராமச்சந்திரனைக் காணச் சென்றான். போகும்போது, "என் அண்ணா இந்தத் தனியான இடத்தில் தவஞ்செய் கின்றார்போலிருக்கிறது! என் பிறப்பு வீணாயிற்று! என்னை எல்லோரும் பழிக்கின்றார்கள்!" என்று சொல்லிக்கொண்டே நடந்து சென்று ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டான். கண்ட தும் விரைந்தோடி ஸ்ரீராமனிடம் சென்று துக்கம் பொறுக்க மாட்டாமல், "அண்ணா அண்ணா! என்று கூவிக் கொண்டே தரையில் விழுந்து அழுதான்; "ஐயோ! அயோத்தியில் ஜனங்கள் சூழச் சிங்காதனத்திலிருந்த தாங் கள் இப்போது மான்கள் சூழ இக்காட்டிலிருக்கும்படி யாயிற்றே! விலைமதிக்கக்கூடாத வஸ்திரம் உடுத்திருந்த இடையில் மரவுரி தரித்துக்கொள்ளக் காலம் வந்ததே! அண்ணா! நீர் ஜடைமுடி தரிப்பானேன்? பரிமளம் வீசும்

சந்தனம் அணிந்து கொள்ளத்தக்க திருமேனியில் புழுதி படிந்திருக்கிறதே! இவ்வளவுக்கும் காரணம் இந்தப் பாவி பரதன்றானே!"—என்று கூறிப் புலம்பினான்.

3. இப்படிப் புலம்பியழும் பரதனை ஸ்ரீராமன் எடுத்துத் தழுவிக்கொண்டு அவனைத் தேற்றி, "அப்பா, இங்கே வந்த காரணமென்ன? உங்களுடைய இந்தக் கோலம் எனக்குச் சந்தேகத்தைக் கொடுக்கிறது. தந்தை பிழைத்திருக்கின்றாரா? நீ தந்தை விரும்பும் பணிவிடை செய்து வருகின்றாயா? நமது நன்மையிலே கருத்துள்ளவராகிய ஆசிரியருக்கு நீ மரியாதை செய்து வருகின்றாயா? கண்மணி பரதா! நீ காலந்தப்பித் தூங்குகிற கெட்ட வழக்கத்தைக் கைக்கொள்ளாமலிருக்கின்றாயா? நல்ல வழியிலே பொருள் தேடவேண்டுமென்பது பற்றி உனக்கு நினைப்பிருக்கின்றதா? குற்றவாளிகளுக்குக் குற்றத்திற்குத் தக்க தண்டனை விதித்து வருகின்றாயா?" என்று கேட்டான். பரதன், தன் கண்களிருந்து நீர் பெருக ஸ்ரீராமனைப் பார்த்து, "அண்ணா! தருமத்தை இழந்த மகாபாவியாகிய எனக்கு இந்த ராஜ தர்மங்களாலே பயனென்ன? மூத்தவனிருக்க இளையவன் பட்டம் பெறுவதில்லை யல்லவா? ஆகையால் நீர் இப்போதே அயோத்திக்குவந்து இராஜ்யத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஐயனே! உமது பிரிவென்னும் நோயினாலும் என்னைப்பெற்ற கொடியவளாகிய கைகேயியின் வரம் என்கிற எமனாலும் தந்தை, தமது ஸத்தியம் இங்கு விளங்கப் பரலோகம் சென்றார்!" என்று கூறி அழுதான்.

4. ஸ்ரீராமபிரான் இச்செய்தி கேட்டதும் ஆ என்றலறிப் பூமியின்மேல் வெட்டுண்ட மரம்போல் விழுந்து

மூர்ச்சித்தான். லக்ஷ்மணனும் ஸீதையும் அவ்வாறே விழுந்து அலறினர்கள். இப்பொழுது குலகுருவாகிய வஸிஷ்டர் தாய்மார் முதலியவர்களும் இங்கு வந்து சேர்ந்தார்கள். வஸிஷ்டர், ஸ்ரீராமன் முதலிய மூவரையும் சமாதானப்படுத்தித் தந்தைக்குச் செய்யவேண்டிய நீர்க் கடனை முடிக்கும்படி சொன்னர். ஸ்ரீராமன் அவர் கூறிய படி செய்தான்.

5. பிறகு எல்லோரும் ஓரிடத்திலே கூடினர்கள். அப்பொழுது ஸ்ரீராமன், பரதனைப் பார்த்து, "பரதா! நீ ஏன் இக்கோலங்கொண்டு காட்டிற்கு வந்தாய்?" என்று கேட்டான். பரதன், இருகரங்களையும் சிரசில் குவித்துக் கொண்டு நின்று, "அண்ணு! பெரியோர் மனத்திற்குப் பொருந்தாத வரத்தினல் இராஜ்யத்திற்கு உரிய உம்மைக் காட்டுக்குப் போகும்படி சொல்லி அதனல் தந்தை இறந்தார். என் அன்னையும் தன்னலங்கருதிக் கைம்பெண் ஆனள். நீரும் காட்டிற்கு வந்திருக்கிறீர்! இப்படிப்பட்ட அபகீர்த்திக்கு ஆளானவனகிய நானேன் அங்கிருக்க வேண்டும்? உமதரசைக் கைப்பற்ற நான் உம்முடைய பகைவனே? அல்லது வஞ்சகனே—ஐயனே, என் மீது தயவுவைத்து, தந்தை கொடுத்த வரத்தினலே வந்த தீங்கும் என் அன்னை தந்த தீங்கும் நீங்கும்படி தாம் அயோத்திக்கு வந்து அரசை ஏற்றுக்கொண்டு சிறுவனும் அடிமையுமாகிய என்னைக் காக்கவேண்டும்" என்று சொல்லி அவன் திருவடியிலே விழுந்து பணிந்தான்.

6. ஸ்ரீராமன், "பரதா! எழுந்திரு; உன்னிடம் எனக் கொரு குற்றமும் தோன்றவில்லை. நீ உன் தாயை இகழாதே. தந்தையின் கட்டளையின்படி நான் காட்டுக்கு வந்தேன். அவர் கட்டளையின்படி நீ அரசு புரிய வேண்டிய

வன். அப்படிக்கிருக்கப் பெரியவராகிய அவருடைய கட்டளையை மீறுதல் கூடுமா? கூடாதன்றோ? ஆகையால் நான் அவருடைய கட்டளைக்கு மாறாக நடக்கமாட்டேன்" என்றான்.

7. பரதன் இதைக் கேட்டதும் ஒருதரம் பெருமூச்சு விட்டு, "அண்ணா! தந்தை எனக்கு அரசைக் கொடுத்தார்! என்னுடைய அந்த அரசை நான் உமக்குக் கொடுக்கின்றேன். அதனைத் தாம் தடைசொல்லாமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொல்லி அவன் திருவடியைப் பிடித்துக் கொண்டான். ஸ்ரீராமன், "பரதா! எழுந்திரு, அறிவுடைய நீ இவற்றிற்கெல்லாம் வருந்துவது அழகாகாது. அயோத்திக்குச் சென்று நீ சுகமாயிரு. தந்தையின் கட்டளையைக் காப்பாற்று. நான் இங்கிருந்து என் கடமையைச் செய்துவருகின்றேன். உனக்குக் கொடுக்கப்பட்ட அரசை எனக்கு நீ கொடுப்பது முறையாகாது. தந்தையிட்ட கட்டளையின்படி பதினான்கு வருஷம் வனவாசஞ் செய்ய ஒப்புக்கொண்டு வந்த நான், உனக்கிணங்கி இப்போது அயோத்திக்கு வந்தால் அதை எப்படி நிறைவேற்றியவனாவேன்? ஆகையால் நான் வரமாட்டேன்" என்றான்.

8. பரதன், "அண்ணா! உமக்கு ஒப்பானவர் யாரிருக்கிறார்? நீர் எல்லாம் உணர்ந்த பெரியவர். நான் உம்மைப் பிரிந்த துயரம் பொறுக்க முடியாதவனாயிருக்கிறேன். அற்ப அறிவுள்ள என் தாய் செய்த இந்தக் கொடுமையை எனக்காகப் பொறுத்தருளல் வேண்டும். தருமத்திற்குக் கட்டுப்பட்டவனல்லவா நான்? நான் எப்படி அரசை ஒப்புக்கொள்வேன்? எங்களெல்லோரையும் காப்பாற்றவல்ல தாங்கள் இப்படி வனவாசம் செய்வது தகாது.

உமக்குப் பின்னே பிறந்தவனும் உம்மை விட்டுப் பிரிந்திருக்க அசக்தனுமாகிய நான் எப்படி அரசையாள்வேன்? நீர் பதினான்கு வருஷம் அரசை என்பொருட்டு ஆண்டு வாரும். நான் உமக்காகப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்கிறேன்" என்றுரைத்து இருகரங் குவித்து வேண்டிக்கொண்டான்.

9. ஸ்ரீராமன், "பரதா! 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்பதை நீ யறியாதவனா? அல்லவே—நீ அவர் சொற்படி அரசுசெய்! பெற்றோரைக் கனம் பண்ணு. நான் இந்தக் காட்டிலிருக்கிறேன். உனக்குச் சத்ருக்நன் துணையாயிருப்பன். என்னுடன் லக்ஷ்மணனிருக்கிறான். நாம் நால்வரும் சேர்ந்து தந்தை கூறிய வாக்கை நிறைவேற்றுவோம்; அவரை ஸத்தியம் தவறாதவராக்குவோம். தந்தை என்னைப் பார்த்து அரசை ஏற்றுக்கொள்ளும்படி சொன்னபோது நான் மறுத்தேனா? அதுபோல் இப்பொழுது உனக்கு மூத்தவனாகிய என் பேச்சை நீ தட்டாதே!" என்றான்.

10. பரதன் இப்பொழுது பெருந்துயரமடைந்து, தருப்பைகளைப் பரப்பி, ஸுமந்திரனையும் குருவையும் பார்த்து, "என் அண்ணாவுக்கு என்னிடம் தயை உண்டாகும் வரையில் கடன் கொடுத்துப் பொருளை இழந்தவன் கடன்காரன் வீட்டு வாயிலிலே கிடப்பதுபோல் உணவின்றி முகத்தை மூடிக்கொண்டு நான் இந்தப் பர்ணசாலை வாயிலிலே படுத்துக்கொண்டிருப்பேன்" என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டான். ஸ்ரீராமன், "பரதா! நீ இந்தச் செய்கை செய்ய நான் என்ன குற்றம் செய்தேன்! நீ செய்யத் துணிந்த இந்தச் செய்கையை விடு. அயோத்திக்குச் செல்" என்றான்.

11. பரதன், எல்லோரையும் பார்த்து, "ஐயோ! நீங்களேன் ஸ்ரீராமபிரானை நகரத்துக்கு வரும்படி கேட்டுக் கொள்ளவில்லை? ஏன் சும்மா இருக்கிறீர்கள்?" என்று கேட்டான். அவர்கள், "ஸ்ரீராமர் ஸத்தியந் தவறாதவரென்பதை நாங்களறிவோம். அவர் உமக்குச் சொன்ன மறுமொழி சரியேயாம்" என்றார்கள். பிறகு பரதன், எல்லோரையும் பார்த்து, "நான் என் தந்தையினிடம் அரசை விரும்பி எதுவும் கேட்கவில்லை. இராஜ்யத்தைப் பெறுவதற்காக இப்படிச் செய்யும்படி என் அன்னைக்கு நான் ஒன்றும் சொல்லவில்லை. என் அண்ணா இப்படி வனத்திற்கு வந்ததை நான் ஒப்புக்கொண்டவனுமல்லேன்! நான் அரசை ஆள வல்லமையில்லாதவன். ஆகையினால் இந்த அரசை அண்ணா வேறு யாரிடமாவது ஒப்புவிக்கட்டும்" என்று சொல்லி ஸ்ரீராமன் திருவடியிலே விழுந்தான்.

12. ஸ்ரீராமன், பரதனை எடுத்துத் தன் மடிமீது வைத்துக்கொண்டு "நீ நல்ல புத்தியுடையவன். உனக்கு அரசை ஆளும் வல்லமையுண்டு. நீ மந்திரி பிரதானிகளின் துணையினாலேயே காரியங்களைச் செய்துகொள். கடல் கரையைக் கடந்து பெருகினாலும் நான் என் தந்தையின் வார்த்தைக் கடந்து நடவேன்" என்றான். இதைக் கேட்டதும் பரதன் ஒன்றும் பேசத் தெரியாமல் தலை குனிந்தபடி நின்றான்.

13. இப்பொழுது, ஆகாயத்திலிருந்து, "உண்மையுடைய பரதா! நல்ல குணமுடைய ஸ்ரீராமனே இவ்வனத்திலிருந்து தந்தை சொற்படி பதினான்கு வருஷம் கழிக்கக் கடமைப் பட்டவன்! நீ அந்தப் பதினான்கு வருஷமும் அரசையாளக் கடமைப்பட்டவன்" என்னும் வாக்குண்டாயது. இதைக்கேட்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர்.

14. பரதனும் ஆச்சரியப்பட்டு வேறுவழி யில்லாமை கண்டு "அண்ணு! சொர்ணத்தினுல் அலங்கரிக்கப் பட்டுள்ள பாதுகைகளின் மீது தங்கள் திருவடியை வைத்தருளும்; அவை அரசுபுரியட்டும்" என்று வேண்டிக் கொண்டான். ஸ்ரீராமன், அப்படியே தன்னுடைய பாதத்தைப் பாதுகைகளின் மீது வைத்து அவற்றைப் பரதனுக்குக் கொடுத்தான். பரதன் பாதுகைகளை வணக்கத்துடன் பெற்றுச் சிரசின்மீது வைத்துக்கொண்டு, "அண்ணு, நீர் வனவாசஞ் செய்யும் பதினன்கு வருஷம் நான் ஜடைமுடியுடனும் மரவுரியுடனு மிருந்து காய் கனி கிழங்குகளையே புசிப்பேன்; நகரத்திற்கு வெளியிலேயே வசித்துக்கொண்டிருந்து உங்கள் வரவை எதிர்பார்ப்பேன்; உமது பாதுகைகளிடமே அரசை ஒப்புவித்து விடுவேன். நீர் பதினன்காவது வருஷ முடிந்த மறுநாளே அயோத்தி வந்துவிட வேண்டும், இல்லையாயின் நான் தீயிலே விழுந்து இறந்து விடுவேன்" என்றான். ஸ்ரீராமன் "அப்படியே ஆகட்டும்" என்று கூறிப் பரதனைத் தழுவிக் கொண்டு, "உன் அன்னை கைகேயியை நீ காப்பாற்றிவா; வீண்கோபம் வையாதே" என்று சொல்லி வருந்தினன்.

15. பரதன், உடனே தன் சிரசின் மீது பாதுகைகளை வைத்துக்கொண்டபடியே ஸ்ரீராமனை வலம் வந்து பணிந்து எல்லோருடனும் அவனிடம் விடைகொண்டு அங்கிருந்து திரும்பினன்.

---

## அத்தியாயம். 5.

### பரதன் அயோத்திக்குத் திரும்புவது.

இப்படிப் புறப்பட்ட பரதன் எல்லோருடனும் பரத்வாஜருடைய ஆசிரமம்வந்து அவரை நமஸ்

கரித்து அவரிடம் செய்தி தெரிவித்தான். அவர் பரதனைப் பார்த்து, "நல்ல ஒழுக்கங்களும் நல்ல குணங்களும் உடையவனே, பெரியவர்களிடத்தில் வணக்கமாய் நடக்கும் குணம் உன்னிடம் அமைந்திருப்பது ஆச்சரிய மல்ல! நீ புகழ்பெற்றாய்—நீ பழியை வென்றாய்!" என்று கூறி ஆசீர்வதித்தார். பரதன் இதைக்கேட்டு மகிழ்ந்து அவரிடம் விடைகொண்டு புறப்பட்டுக் கங்கையைக் கடந்து குகனைக் கண்டு அவனிடம் செய்தி தெரிவித்து விட்டுப் பிறகு அயோத்திமா நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தான்; தன் தமையனும் தம்பியுமில்லாத அந்நகரத்தைக் கண்ட பரதன் மிகவும் துயரமடைந்தான். நகரமெங்கும் பார்க்கப் பயங்கரமாய்ப் பாழடைந்திருந்தது. தசரதருடைய அரண்மனை சிங்கமில்லாத குகையைப்போலிருந்தது. இவைகளைக்கண்டதும் பெருந்துயரமடைந்த பரதன் தன் தாய்மார்களை நகரத்திலேயே இருக்கும்படி செய்து ஆசிரியர் முதலியவர்களை நோக்கி, "நான் இப்போதே இந்நகரத்திற்கு வெளியிலேயுள்ள நந்திக்கிராமம் போகின்றேன். நான் அங்கிருந்து என் அண்ணனைப் பிரிந்த துயரத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கின்றேன்" என்றான். ஆசிரியர், நீ உன் அண்ணனிடம் நேயம் பாராட்டிச் சொன்ன வசனங்கள் கொண்டாடத் தக்கன! நீ புகழ் பெற்றாய்! உன் விருப்பப்படிசெய்!" என்றார்.

2. பிறகு பரதன் எல்லோருடனும் நந்திக்கிராமம் போனான். அங்குச் சென்றதும் ஆசிரியரைப் பார்த்து "இராஜ்யத்தைப் பாதுகாத்துவரும்படி நான் நியமிக்கப் பட்டிருக்கின்றேன். இராஜ்ய காரியங்களை யெல்லாம் இப் பாதுகைகள் நடத்தும்" என்று கூறிப் பாதுகைகளை விம்

மாசனத்தின் மீது வைத்துப் பணிந்து, "இந்தப் பாதுகைக ளுக்குக் குடை பிடியுங்கள்! இவைதாம் ஸ்ரீராமருக்குப் பிர திநிதிகள். இவை ராஜ தர்மத்தை நிலை நிறுத்தும்! ஸ்ரீராமர் வந்ததும் என்பாரத்தை நான் அவரிடம் வைத்துவிடுவேன்" என்று தெரிவித்து அன்று முதல் அங்கிருந்து பாதுகைக ளின்பேரால் அரசு புரிந்து வந்தான்.

3. இப்படிப் பரதன் பதினான்கு வருஷங்களையும் கழித்தான். ஸ்ரீராமன், வரவேண்டிய நாள் கிட்டியதும் பர தன் "ஓ இன்னும் என் அண்ணா வரவில்லை. ஆகையால் உடன் பிறப்பை ஆரண்யத்திலே அலையவிட்ட பாவி இன் னும் பூமிக்குப் பாரமாய் இருப்பது பொருந்தாது" என் றெண்ணி சத்ருக்னனை அழைத்து, தீ வளர்க்கும்படி கட்டளை யிட்டு அதிலே விழச் சித்தமானான். இச்செய்தி யறிந்த யாவரும் அக்கினிகுண்டத்தினருகே வந்து கூடினார்கள். கௌஸல்யை பரதனைத் தடுத்து நின்று, "அளவிறந்த கோடி ராமர்களானாலும், பரதா! உனக் கொப்பாக மாட்டார்களென்பது கண்டோம்! நீ இப்படிச் செய்வது கூடாது! இதை விட்டுவிடு" என்று சொன்னாள். பரதன் அவள் பேச்சைச் செவியிலே கொள்ளாமல் தீயிலே விழப் போனான். இப்பொழுது ஓர் அந்தணன் ஓடிவந்து, பரதன் கரத்தைப் பிடித்துத் தடுத்துநின்று, "ஐயன் வந்தான்! ஆரியன் வந்தான்!" என்று கூறி அத்தீயைத் தன் கையி னாலே அவித்தான். பரதன் ஆச்சரியமடைந்து, அந்த அந்தணனை யாரென்று விசாரித்து, அவனை ஸ்ரீராமபிரா னுக்கு அடிமையான மாருதி என்னும் வானரவீரன் என்று தெரிந்துகொண்டு மகிழ்ந்தான். உடனே நகரத்தை அலங் கரிக்கும்படி செய்தான். ஸ்ரீராமன் ஸீதையுடனும் லக்ஷ்ம ணனுடனும் கூடவந்த தன் நண்பர்கள் பலருடனும் அயோத்

திக்கு வந்து சேர்ந்தான். எங்கும் மங்களவாத்தியங்கள் முழங்கின! பதாகைகள் பறந்தன! பரதன் ஸ்ரீராமனுடைய வருகையை அறிந்ததும் பாதுகைகளைச் சிரசின்மீது வைத்துக் கொண்டு வாத்திய கோஷங்களுடனும் நகரத்தார் மந்திரிமார், வஸிஷ்டர் முதலிய பெரியோர் யாவருடனும் எதிர்கொண்டு சென்று அவனை வரவேற்றுப் பாதுகைகளை அவன் பாதங்களிலே வைத்துப் பணிந்து, "அரசை உம்மிடம் ஒப்புவித்து விட்டேன்! என் விருப்பம் நிறைவேறியது! உமது அரசை நீர் பெற்றுக்கொள்ளும்"! என்றான். இதைக் கேட்டதும் யாவரும் ஸந்தோஷமடைந்தனர். ஸ்ரீராமச்சந்திரனும் பரமாநந்த மடைந்தான்.

4. பிறகு பரதன் ஸ்ரீராமச்சந்திரனுடைய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய முயற்சிகள் செய்து நல்ல வேளையில் பெரியோர்களின் முன்னிலையில் உலகமெல்லாம் புகழ்ந்து பேசத் தேவர்கள் பூமழை பொழிந்து வாழ்த்த ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தான்! இப்பொழுது எல்லோரும் பரதனைப் புகழ்ந்து வாழ்த்தினார்கள்! "இவனைப்போன்ற தம்பி ஒருவனை உலகத்தில் யாரேனும் அடையப்போகின்றனரோ" என்று கூறினார்கள். இவனே நல்ல தம்பி! இவனே நல்ல தம்பி!" என்று கூறி அவனை யுவராஜாவாக இருக்கும்படி வேண்டினார்கள். பரதன் அதை யேற்றுக் கொண்டு என்றும் அண்ணாவின் ஆணையின்படி நடந்து இராஜ காரியங்களைக் கவனித்துக் கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தான்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

# குகன்

## நல்ல நண்பன்

---

### அத்தியாயம் 1

குகனும் அவன் குணமும்.

இந்தியாவில் வடக்கே கங்கை என்னுமொரு நதி ஓடுகிறது. இதைத் தேவநதி என்றும், புண்ய நதி என்றும் எல்லோரும் புகழ்வார்கள். இதுபாயும் இடங்களெல்லாம் பூமியின் மற்ற இடங்களைவிட நல்ல வளப்பமுடையனவாயிருக்கும். இந்நதியில் மூழ்குகிறவர்களுடைய பாபமெல்லாம் நீங்கும். சரீர சௌக்யமுண்டாகும். ஆகையினால் இந்நதிக்கு எல்லோரும் யாத்திரை சென்று நீராடுகிறார்கள்; இதில் எந்தக் காலத்திலும் இடைவிடாமல் நீரோடிக்கொண்டிருக்கும். ஆகையால் இதை ஜீவநதியென்றும் சொல்வதுண்டு.

2. இப்படிப்பட்ட பெருமையுடைய இந்த நதிக்கரையின்மீது சிருங்கபேரபுரம் என்னும் ஓர் அழகிய நகரமிருந்தது. இது நீர்வளமும் நிலவளமும் நிறைந்து, பகைவர்களாலே அசைக்கமுடியாத பெருங்காவலை யுடையதாயிருந்தது. இங்கே, இனிய கனிகளைத் தரும் விருக்ஷங்களடர்ந்த சோலைகளும் நல்ல மணந்தரும் மலர்கள் நிறைந்த நந்தவனங்களும் தெளிந்த நீர் நிறைந்த தடாகங்களும், அற்புத வனங்களும் கண்கொள்ளாத காட்சியாக விளங்கின. பலவகைப் பறவைகளின் ஆடல்பாடல்களை இங்கெங்கும் பார்க்கலாம்.

வன விலங்குகள் கூட்டங் கூட்டமாகவும் தனித்தனியாகவும் அங்குள்ள வனங்களிலே உலாவி வரும்.

3. இந்த நகரை குகன் என்னும் வேடனொருவன் காத்துவந்தான். இவன் தன் ஜாதிக்குரிய ஒழுக்கங்களிலே ஒரு சிறிதும் தவறாதவனாயிருந்தான். இவன் பெரிய கோபி; இருளைப்போன்ற நிறமுடையவன்; கரிய மேகம் போன்றிருண்ட தலைமயிருடையவன். நெறிந்த புருவங் களும், விஷமுள்ள நாகப்பாம்பைப் போல் கோபத்தோடு பார்க்கும் கண்களும், பர்வதமபோன்ற பருத்த தோள் களும், மயிர் அடர்ந்த நீண்டகரங்களும் மலையென்று சொல்லும்படி விசாலமா யிருக்கும் மார்பும், பருத்து உருண்டு திரண்ட தொடைகளும் உடையவன். இவனைக் கண்டவரெவரும் நடுங்குவார்கள். இவன் தன்னுடைய காலிலே தோற் செருப்பும் இடையிலே புலித்தோலும் மார்பில் பலகறைத் தாவடமும் பூண்டிருப்பான். இடுப்பி லுள்ள கச்சையில் இரத்தந் தோய்ந்த வாளும் கையில் பெரிய வில்லும் முதுகில் அம்பறாத்தூணியும் உடையவனா யிருப்பான். கொம்பு, தாரை, முதலிய வாத்தியங்களிலே பழகியவர்களும். இடிபோல் ஆரவாரிக்கத்தக்க பலமுடைய வர்களும் வண்டுக் கூட்டத்தைப்போல் மொய்த்திருப்பவர் களுமாகிய பெருஞ் சேனைகள் இவனுக்குண்டு. இந்தக் குகன் எமனும் அஞ்சத்தக்க பெருங் குரலுடையவன். இவன் தன்னிடம் தேடி வருகிறவர்களுக்கு மீனும் தேனும் ஏராளமாகக் கொடுத்து அவர்களுடைய பசியைத் தீர்க் கும் நல்ல இரக்கமுடையவன். இவன் சோர்வில்லாத முகமுடைய வீரன். ஆயிரம் நாவாய்களுக்கு அதிபதி. ஆயினும் இவன் பித்தனைப்போல் பேசுவான். ஆனால் இவனிடம் நல்ல தருமகுணம் நிறைந்திருந்தது. இவனைத்

தலைவனாகக் கொண்ட வேடர்கள் கங்கையிலே படகோட்டுந் தொழிலை மேற்கொண்டிருந்தார்கள்; பாபத்திற்குப் பயந்து பொருள் தேடிக் காலங்கழித்து வந்தார்கள். குகனிடம் தரும குணம் மேலிட்டிருந்தமையால் இவனை வேடர்கள் எல்லோரும் தங்கள் உயிர்போல் நேசித்து வந்தார்கள். இவன் நல்லவனாக விளங்கியபடியால் இவனை எல்லோரும் புகழ்ந்தார்கள். கல்வி, கேள்வி யில்லாதவனாகிய இவனை இவனுடைய நல்ல குணங்களல்லவா மேன்மைப்படுத்தின? ஆகையினால் கல்வி கேள்வி நிறைந்தவனானாலும் நல்ல குணங்களில்லாதவனானால் அவனை எல்லோரும் வெறுப்பார்கள் என்பதை நாம் அறிகிறோம்.

4. இந்தக் குகனிடம் விளங்கிய பல நல்ல குணங்களுக்குள் அன்பு என்னும் அரிய குணமொன்று. அந்த அரிய குணமுடைய இவன், எல்லோரையும் தன்னைப் போல் எண்ணித் தக்கபடி உபசரிக்கும் பொருந்தன்மையுடையவனானன். இஃதன்றி இவனிடம் தன் குலத்தை உயர்த்தும் பெருங்குணமும் இயற்கையாய் அமைந்திருந்தது.

---

## அத்தியாயம் 2

### குகனும் ஸ்ரீராமபிரானும்

இப்படிப்பட்ட குகன் ஒருநாள் நகர்சோதனையாய்ப் புறப்பட்டுத் தன் பட்டினத்தைச் சுற்றிப் பார்த்து வந்தான். அப்பொழுது அருகே யாரோ சிலர் பேசுவது அவன் செவியிலே விழுந்தது. உடனே குகன் அங்கே நின்று, "ஓ எழெட்டுப் பேர் ஒன்றுகூடிப் பேசுவதுபோலல்லவா தெரிகிறது. நல்லது; நாம் இதைச் சோதிக்கவேண்

டும்" என்று தீர்மானித்துச் சத்தம்வரும் திசையை நாடி, சந்தடி சிறிதும் செய்யாமல் மெதுவாக நடந்துசென்றான். அத்திசை அவனை ஒரு முனிவருடைய ஆசிரமத்திற்கு அருகே கொண்டுபோய் விட்டது. அங்கே மகரிஷிகள் சிலரும் தவக்கோலம் பூண்ட இரண்டு ஆடவரும் ஒருமாதும் ஒன்று கூடியிருக்கக் கண்டான். கண்டதும் ஆச்சரியமடைந்து, "இவர்கள் பேசுவதைக் கவனிப்போம்" என்றெண்ணி, ஒருபக்கம் மறைந்திருந்து கேட்டான். அப்போது சில தபோதனர்கள் "எழுந்தருள வேண்டும்! எங்கள் பாக்கியமே பாக்கியம்! எங்கள் மனக்குறை இன்றோடு ஒழிந்தது!" என்று மிகுந்த ஆதரவாய் அவர்களை அழைத்தார்கள். உடனே தவக்கோலம் கொண்டிருந்த இரண்டு ஆடவர்களும் அம்மாதும் தபோதனர்களிடம் வந்து கைகுவித்துத் தொழுதனர். முனிவர்கள் அவர்களை ஆசீர்வதித்து, "ஸ்ரீ ராமச்சந்திரா! பரிசுத்தமான கங்கையில் ஸ்நானம் செய்தாயா!" என்று கேட்டார்கள். ஸ்ரீராமச்சந்திரன், "தேவரீர்களுடைய அநுக்ரஹத்தால் ஸ்நானம் செய்துவந்தோம். இனித் தேவாராதனை செய்தல் வேண்டும்" என்றான். முனிவர்கள் நீங்கள் அதனை இங்கேயே செய்து முடியுங்கள். நாங்கள் அன்போடு செய்யும் அற்ப விருந்தை ஏற்றுக்கொண்டு எங்களைக் கண்ணியப் படுத்துங்கள்" என்றார்கள். ஸ்ரீராமச்சந்திரன், "அப்படியே" என்று கூறிக் கடவுளின் ஆராதனையை முறைப்படி செய்து முடித்துப் பிறகு முனிவர்கள் விருப்பப்படி விருந்துண்டு அவர்களோடு இனிமையாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருந்தான்.

2. இந்த அரிய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த குகன் "ஓகோ இவர்கள் கூடிய ஒரு விரதத்தை

மேற்கொண்டு இக்கோலத்துடன் இங்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. இவர்கள் முகத்தில் தெய்வீக சுபாவம் விளங்குகிறது! அதனாலேதான் மகரிஷிகள் இவ்வாறு இவர்களை உபசரிக்கின்றார்கள். இவர்களைச் சாதாரண மனிதர்களிலே சேர்த்தெண்ணுவது தவறாகும். இவர்களிடம் என்னை அறியாமல் எனக்கு அன்புண்டாகின்றது! கண்களிலிருந்து என்னை அறியாமலே நீர் சொரிகின்றது! இவர்களுக்கும் எனக்கும் இதுவரையில் ஒரு சம்பந்தமுமில்லாமலிருந்தும் எனக்கு இவர்களிடம் இப்படி அன்புண்டாகிறபடியினால் இந்தச் சந்திப்பில் ஏதோ விசேஷ மிருத்தல் வேண்டும். ஆகையினால் இவர்களின் முன் நானே நேரிற் சென்று இவர்களை இன்னாரென்று அறிகின்றேன்" என்று எண்ணிச் சற்று முன்வந்து உற்று நோக்கினான். ஸ்ரீராமச்சந்திரனுடைய அழகிய முகத்தையும், குளிர்ந்த பார்வையையும் கண்டதும் அவன் மனம் உருகியது. உடனே, அவன் "என் பாக்யத்தைக் கண்டேன்" என்று மகிழ்ந்து, "இருக்கட்டும், இவர்கள் உண்பதற்குக் கொஞ்சம் தேனும் பக்குவஞ் செய்த மீனும் கொண்டுவந்து பிறகு காண்கின்றேன்" என்று தனக்குள் எண்ணியபடியே அங்கிருந்து வீடு வந்து தேனையும் பக்குவஞ் செய்த மீனையும் எடுத்துக் கொண்டு தன்னுடைய வில்லையும் வாளையும் வைத்துவிட்டு ஸ்ரீராமச்சந்திரன் எழுந்தருளியிருக்கும். இடத்திற்கு வந்து சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து அவனைப் பணிந்து எழுந்து கைகட்டி வாய்பொத்திக் கொண்டு நின்று, "நான் இங்கு வேடர்களுக்கு வேந்தனாக இருப்பவன். தங்களைத் தரிசிக்க வந்தேன்" என்றான். ஸ்ரீராமச்சந்திரன், "அப்படியா உட்காரு" என்று உபசரித்தான். குகன் உட்காராமல் "ஐயனே! கொஞ்சம் தேனும் மீனும் கொண்டுவந்தேன். திருவுள

மிரங்கி அமுது செய்தருளல்வேண்டும்” என்று வேண்டிக் கொண்டான்.

3. ஸ்ரீராமச்சந்திரன் அங்கிருந்த முனிவர்களெல்லோ ரையும் நோக்கி, “இவன் வேடனேயானாலும் எனது அன்பிற்குத் தங்குமிடம் போலிருக்கிறான். ‘அன்புள்ளவர் தேகமே உயிருடன் கூடியது. அது இல்லாத தேகம் எலும் பைத் தோலால் மூடப்பெற்றதாகுமே ஒழிய உயிருள்ள தாகாது’ என்று பெரியோர் சொல்லியிருப்பது ஞாயமே யாகும். அன்பால் அருளும், அருளினாலே அறமும், அறத் தினாலே நல்ல கதியும் உண்டாகுமாதலால், பெரியோர் அன்பை இவ்வாறு சொல்லியிருக்கின்றார்கள். ஆகையால் இந்தக் குகன் தன் ஜாதிக்குரிய உணவினை உள்ளன்போடு இதோ கொண்டு வந்திருக்கின்றான். அகத்தினழகு முகத் தில் தெரியுமென்பதுபோல் அந்த அன்பை இவன் முகமே தெரிவிக்கின்றது. இவ்வுணவை நாம் அங்கீகரிப்பது நீதியோ, அநீதியோ, நீங்களே தெரிவித்தருளல்வேண்டும்” என்று கேட்டான்.

4. முனிவர்கள் ஸ்ரீராமச்சந்திரனை நோக்கி, “தரும முணர்ந்த சாந்தகுணசீலனே! இவை வேடர்க்குரிய உண வாயினும் இவன் அன்போடு இவ்வுண்டியை உனக்குக் கொண்டு வந்திருக்கின்றானாகையால் நாம் மறுப்பது அழகா காது. மறுத்தால் இவன் உண்மையிலே கொண்டுள்ள அன் பிற்குக் குறைவுண்டாகும். அங்கீகரிப்பதே தகுதியாகும்” என்றார்கள்.

5. ஸ்ரீராமச்சந்திரன், “பெரியவர்களே! நியாயமே சொன்னீர்கள்! அன்போடு கொடுப்பது அற்பமேயானாலும் அதுவே தேவாமிர்தத்திற்குச் சமானமாகும். அன்பினாலே

யாவும் பரிசுத்தமடையு மல்லவா? மேலும் இவ்வுணவு க்ஷத்திரியர்க்கு ஏற்றதேயாம். ஆகையால், இந்த உணவை யேற்றுக்கொள்வோம்'' என்று கூறினன்.

6. குகன், இரு கரங்களையும் சிரசின்மேலே கூப்பி வணங்கி "என் பாக்கியம்'' எனறான். ஸ்ரீராமச்சந்திரன், "உன் அன்பே அன்பு—உனக்கு மங்களமுண்டாகட்டும். நாங்கள் இங்கிருந்து நாளையதினம் கங்காநதியைக் கடந்து செல்ல நிச்சயித்திருக்கின்றோம். நீ சுகமே உன் வீட்டிற்குப் போயிருந்து நாளையதினம் அதிகாலையில் உன் சுற்றத்தோடும் படகோடும் அங்கு வரலாம்'' என்று மிகவும் அன்போடு சொன்னன்.

7. குகன், "ஐயனே! தங்களை விட்டுப் பிரிந்து செல்ல மனம் வரவில்லை. உடனிருந்து உங்களுக்கு வேண்டிய வேலைகளைச் செய்துகொண்டிருக்க மனம் விரும்புகிறது. தேவரீர் தயை செய்யவேண்டும்'' என்றான். ஸ்ரீராமச் சந்திரன் ஸீதாபிராட்டியையும் லக்ஷ்மணனையும் பார்த்து, "இவன் கன்றைவிட்டுப் பிரிய மனமில்லாத பசுவைப்போல் நம்மை விட்டுப் பிரிய மனமில்லாதவனயிருக்கிறான். போ என்று சொல்லியனுப்ப எனக்கும் மனம் வரவில்லை. நம் முடன் இவனை நிறுத்திக்கொள்வோம்'' என்று சொல்லி, குகனை அழைத்து, "நீ எங்களுடன் உன் இஷ்டப்படி இரு'' என்றான். இதைக் கேட்டதும் குகனுடைய தேகம் மயிர்க் கூச்சல் அடைந்தது. அவன் என்று மடையாத சந்தோஷமடைந்தான்.

8. இவ்வாறு கட்டுப்பட்ட குகன், அவர்கள் அங்கு வந்த வரலாற்றினை அறிய விரும்பினன். லக்ஷ்மணன் அந்த வரலாற்றை விவரமாக எடுத்துச் சொன்னன். கேட்ட

குகன் பெருந் துயரமடைந்தான். அவன் கண்களிலிருந்து அருவிபோல் நீர் பெருகியது. "ஐயோ! தீரபுருஷராகிய ஸ்ரீராமச்சந்திரப்பிரபுவைத் தனக்கு ராஜாவாக அடைவதற்கு இந்த பூமி பாக்கியம் செய்யாமற் போயிற்றே!" என்று கூறி அவன் வருந்தினான். இப்பொழுது சூரியனும் இந்தத் துக்கத்தைக்கண்டு சகியாதவனைப்போல் அஸ்தமனமானான்.

9. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் குல வழக்கப்படி மாலைக் கடனை முடிக்கச் சென்றான். இதற்குள் லக்ஷ்மணன் அங்குத் தரையில் நாணற் புல்லைப் படுக்கையாக விரித்தான். ஸ்ரீராமச்சந்திரன் வந்து அந்தப் படுக்கையில் சயனித்துக் கொண்டான் ஸீதையும் அதிலொரு பக்கம் படுத்துக் கொண்டாள். இப்படி இருவரும் படுத்துக்கொண்ட பிறகு லக்ஷ்மணன், தன் கையில் வில்லைப் பிடித்துக்கொண்டு இரவு முழுதும் கண் விழித்தபடியே நின்று காவல் புரிந்து வந்தான். குகனும் இவர்களுடைய குணத்தை எண்ணி எண்ணி மனந்தளர்ந்து லக்ஷ்மணனைப்போல் தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தான்.

10. இப்படியிவர்கள் பொழுது விடியுமட்டும் காவல் புரிந்துகொண்டிருந்தார்கள். பொழுது புலர்ந்ததும் ஸ்ரீராமச்சந்திரன் எல்லோருடனும் கங்கைக்குச் சென்று குகனை நோக்கி, "அன்பார்ந்த நண்ப! சீக்கிரம் படகு கொண்டுவா" என்று சொன்னான். இதைக் கேட்டதும் குகன், வேரிழந்த மரத்தைப்போல் பூமியில் விழுந்து புரண்டு புரண்டு அழுது விசனப்பட்டான். அவனை ஸ்ரீராமச்சந்திரன் தேற்றினான். குகன் எழுந்து மனந்தேறி "ஸ்வாமி! தாம் எழுந்தருளியுள்ள இவ்விடமும் காடுதானே! இங்கு ஒரு குறைவும் உமக்கிராது. தினையும் தேனும் இங்கு ஏராளமாகக் கிடைக்கும். நாங்கள்

எங்கள் உடலும் உயிரும் உள்ளவரையில் உமது ஏவலைக் கேட்டு ஊழியம் செய்துவருவோம். சுவாமி! விளையாட இங்கு விசாலமான காடுகள் உண்டு. நீராடப் பரிசுத்தமான கங்கையிருக்கிறது. எங்களால் ஆகாத காரியம் ஒன்றுமே யில்லை. தேவலோகத்திலுள்ள பொருளையும் கொண்டுவந்து கொடுக்க நாங்கள் காத்துக்கொண் டிருக்கிறோம். கணக்கற்ற படகுகள் எங்களிடமுண்டு. அடியேனிடத்திலுள்ள படை வீரர்கள் நிகரற்ற பராக்கிரமசாலிகள். ஆதலால் தேவரீர் இங்கேயே இருந்துவிடலாம். வேறெங்கும் போகவேண் டாம். எங்களுடைய குடிசையிலே ஒரு நாளேனு மிருந்து பார்த்தால் எங்கள் திறம் நன்றாய் விளங்கும். நாங்களும் புண்ணியம் பெற்றவர்களாவோம். கிருபை செய்ய வேண் டும்" என்று கேட்டுக்கொண்டான். ஸ்ரீராமச்சந்திரன், "ஐயா? நீ மனத்தளர்வடைய வேண்டாம். நாங்கள் சில புண்யநதி ஸ்நானம் பண்ணி முனிவருடைய திருவருள் பெற்றுத் திரும்ப வேண்டியவர்களா யிருக்கிறோம். வரும் போது இங்கேவந்து உன்னைப் பார்த்துவிட்டுப் போவோம். அது வரையில் நீ பொறுத்திரு. நாங்கள் கொண்ட விரதத் திற்குப் பழுதுவாராம லிருக்கட்டும்" என்று இனியமொழி கள் பல சொல்லிக் குகனைச் சமாதானப்படுத்தினான்.

11. பிறகு குகன் மறுமொழி சொல்ல வழியில்லாமல் ஒருவாறு தேறிப் படகு கொண்டுவரத் தன் ஆட்களுக்குக் கட்டளையிட்டான். படகு அந்த நிமிஷமே வந்து நின்றது. ஸ்ரீராமச்சந்திரன், எல்லோரிடமும் விடைகொண்டு, ஸீதா பிராட்டியுடனும் தம்பியுடனும் படகேறினான். படகு அன்னம் போலசைந்து அக்கரை சேர்ந்தது. படகை விட்டு ஸ்ரீராமன் இறங்கியதும் குகனை நோக்கி, "நண்ப! சித்திர கூடபர்வதம் எங்கே இருக்கிறது?" என்று கேட்டான்.

12. குகன், "ஐயா! தாம் இங்கு நிர்ப்பயமாய் வசிப்பது கூடாத காரியமாகும். அடியேன் ஒன்று சொல்லுகிறேன். இந்த ஆரண்யத்தில் நான் அறியாதவழி ஒன்றுமே இல்லை. இங்கேயே இருக்க இடம் அமைத்துத் தருகின்றேன்; எவ்விதத் தீங்கும் வாராமல் காக்கின்றேன்; இச்சித்த பொருளையெல்லாம் எச்சகத் திருப்பினும் கொண்டு வந்து கொடுக்கின்றேன். தங்களைத் தனியேவிட்டுப் பிரிய எனக்கு மனந் துணியவில்லை. என் முழுச் சேனைகளுடன் கூடவே இருந்து எப்பொழுதும் நான் காத்து வருகிறேன். என் வேண்டுகோட்கு இரங்கவேண்டும்" என்று திருவடியிலே விழுந்து பணிந்தான். இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரன், சிறிது நேரம் ஒன்றும் பேசாமலிருந்தான்.

---

## அத்தியாயம் 3.

### குகன் ஸ்ரீராமச்சந்திரனுடைய நட்பைப் பெறுவது.

அப்பால் ஸ்ரீராமச்சந்திரன் ஸீதாபிராட்டியையும் லக்ஷ்மணனையும் பார்த்து, "உலகத்தில் விருப்பமுள்ளபோது சிநேகிப்பதும் விருப்பமில்லாதபோது கொண்ட சிநேகத்தை விடுவதும் ஜனங்களுக்குள் பெரும்பாலார்க்குச் சகஜமா யிருப்பதைக் காண்கிறோம். அது ஒருபோதும் சிநேகமாகாது. சிநேகஞ் செய்வதற் குரியவர் இன்னாரென்பதை நன்றாய்த் தெரிந்துகொண்ட பிறகே சிநேகம் செய்தல்வேண்டும். சிநேகஞ் செய்வதற் குரியவர் அகப்படுவதருமை; அகப்பட்டாலும் அவர்களுடன் சிநேகிக்கும் உபாயத்தைக் கண்டுபிடிப்பது அதனினும் அருமை. அப்படியே உபாயங்கண்டு சிநேகிப்போமாயினும் நன்மை தீமை இரண்டிற்கும் வேறுபடாமலிருப்பது அதனினும்

அருமை! இந்தக் குகன் நம்மை உண்மையாகவே நேசித்திருக்கின்றானென்று தெரிகிறது. தன்னுடைய உயிரைத் துரும்பாக எண்ணுதல், கூடுமாயின் பொருள் கொடுத்தல், நல்ல சொல் சொல்லுதல், கூடும்போது மகிழ்தல், துன்பங் கண்டபோது நோதல், பிரியுங்காலத்தில் வருந்தல்—ஆகிய மெய்யன்பர்களுக்குரிய ஆறு குணங்களும் இவனிடம் விளங்குகின்றன. அன்றியும் இவனுக்கும் நமக்கும் மனம் ஒத்திருக்கின்றது. ஆகையால் இவன் நமக்கு மேலான நண்பனாகின்றான். இவனை நாம் நேசிப்போம்" என்று சொல்லிக் குகனைப்பார்த்து, "நீயேன் இவ்வாறு கலங்குகின்றாய்? எங்களுக்கு ஒரு குறைவும் நேராது, கவலைப் படாதே? நாங்கள் பெற்றோரின் வாக்கைக் காப்பதின் பொருட்டு வந்துள்ளோம். பாக்யவசத்தால் உன்னுடைய நட்பு ஏற்பட்டது. நீ எங்களுடன் வருவதானால், கங்கையைக் கடக்க வருவோரை முறைதெரிந்து உபசரிப்பவர் இங்கே வேறு யாருமில்லாமற் போவர். அது சிறப்பாகாது. எதற்காகச் சிநேகங் கொள்வது! சிரிப்பதற்குக் காரணமான விஷயத்தைச் சொல்லிச் சிரிப்பதற்காகவா? அல்ல; வேண்டாத செய்கை செய்வதைக் கண்டால் அதை முன்பே எடுத்துச் சொல்வதற்காகவேயாம். இது இருக்கட்டும். நான் முடிவாகக் கூறும் உறுதியைக் கேள்—இன்று முதல் நீயே எனக்குரிய தோழன்! லக்ஷ்மணன் உன் தம்பி! ஸீதை உன் அண்ணி! என் இராஜ்யமுழுதும் உன்னுடையது! நான் இந்தக் காட்டின் வாழ்வை முடிக்கிற வரையில் எனக்குத் துணையாக உன் தம்பி லக்ஷ்மணன் அருகே இருப்பான். அயோத்தியை என் தம்பியாகிய பரதன் ஆளுகிறான். அவனுக்குத் துணையாக நீயிரு. என் பேச்சைத் தட்டாதே. கொஞ்சநாள் நீ மனம் பொறுத்திரு.

நாங்கள் இக்கானக வாழ்வை முடித்துக்கொண்டு திரும்பும் போது உன்னை வந்து காண்கிறோம்" என்று கூறிக் குகனை மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு போய்வருமாறு விடையளித்தான்.

2. குகன் ஸ்ரீராமபிரான் சொன்ன ஒற்றுமைப்பேச்சை எண்ணி எண்ணி மனமுருகி, கண்களினின்றும் நீர்பெருக நின்று, தனக்குள், "அடடா, என்ன கருணை! நமது பிறவியோ இழிவான பிறவி! நம்மிடத்து இப்படிப்பட்ட அன்பு காட்டிய இந்தத் தயாள குணசீலரை நாம் இதற்கு முன்பு ஒரு போதும் காணாதிருந்தும் இவர் நம்மைத் தமது உடன் பிறந்தவர்களோடு ஒருவனைச் சேர்த்திருக்கிறார். இவருடைய அன்பு என்றும் மறக்க முடியாதது. பெரிய அறிவாளிகள் ஒரு காலத்திலும் தங்கள் பெருமையிலிருந்து விலகமாட்டார்கள் என்பது தெரிந்தது. கெடுங்காலம் தங்களுக்குத் தீங்கு செய்வோரையும் காப்பது அறிவுடைய பெரியவர்களின் சுபாவமல்லவா?" என்று எண்ணி மகிழ்ந்து ஸ்ரீராமச் சந்திரனை வணங்கித் தொழும் கரங்கள் சிரசின் மேலிருக்க அவரைப் பார்த்துக்கொண்டே பிரிந்தான். ஸ்ரீராமச்சந்திரனும் சித்ரகூட பர்வதம் போய்ச்சேர்ந்தான்.

---

# அத்தியாயம் 4.

## குகன் பரதனைச் சந்திப்பது.

குகன் சிருங்கபேரபுரத்தில் தன் உயிரை இராமச்சந்திரனிடம் வைத்து அவனுடைய திருவுருவத்தை எப்போதும் எண்ணியபடியிருந்து வந்தான். இப்படியிருக்கையில் ஒருநாள், பெருஞ்சேனையுடன் யாரோ ஓரரசன் தன்னுடைய நகர்ப்புரம் வந்து இறங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டான். உடனே குகன், "இவ்வரசன் யாவன்? பரதனே? பரதனுக்குத்தான் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி நாட்டைக் கொடுத்துவிட்டு காட்டுக்கு வந்திருக்கிறாரே, அவன் நாட்டிலே சுகமாயிருப்பதை விட்டுக் காட்டுக்கு ஏன் வந்தான்? ஒருகால் இவன் தாயாரின் கெட்ட போதனைக்கு உடைந்தையாய் எனது நாயகனைக் கெடுக்க எண்ணி வந்திருக்கிறானே? அப்படிப்பட்ட கெட்ட எண்ணங்கொண்டு பரதன் வந்திருப்பானாயின் நான் அவனைச் சும்மாவிடப் போகிறதில்லை. இவ்வஞ்சகன் நன்றி கொன்றவனாகிறான்—

2. "அடே பரதா! ஸ்ரீராமச்சந்திரனுக்கு இந்தக் காட்டில் குகனென்கிற ஒரு தோழன் இருக்கிறான் என்பதை உனக்குச் சொல்லுவாரில்லையா? நீ என்னைக் கடந்து போயல்லவோ என் இறைவனை எதிர்க்கவேண்டும்? என் வல்லமை உனக்குத் தெரியாது. நீ ஆழமறியாமல் காலிடுபவனுக்குச் சாமானமாகிறாய்! நான் உனக்கும் உன் சேனைகளுக்கும் அஞ்சேன். அடே நீ ஆண்மகனானால் முன்வைத்த காலைப் பின்வைக்காமல் நின்று என்னை எதிர்த்துச் சண்டை செய்ய பார்க்கலாம்" என்று வீரவார்த்தைகள் கூறி அண்டங்களெல்லாம் நடுங்கும்படி ஆரவாரித்தான்; பெருநகை செய்தான்; கண்கள் தீப்பொறி பறக்க, மூக்கிலிருந்து

தீப்புகை வெளிப்பட, உதடுகளை மடித்து மடித்து விழித்துப் பார்த்து வீராவேசமடைந்து கத்தி வெட்டுகளைப் போல் கடிந்த மொழிகள் பல சொல்லி மார்புதட்டி, வில் வாள் வேல் முதலிய ஆயுதங்களுடன் திரண்டு வரும்படி தன் சேனைகளை அழைத்தான். புவியில் வாழும் புலிகளெல்லாம் ஒருங்குசேர்ந்து வந்து சூழ்ந்தன போல் வேடுவப் படைக ளெல்லாம் அந்த நிமிஷமே குகனுடைய முன்னிலையில்வந்து நின்றன. குகன், வீரர்களைப் பார்த்து "சூரர்களே! இதோ வருகிறான் படைகளுடன் ஒருவன். இவன் வஞ்சக நெஞ்சன். என் நாயகனாகிய ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவை எதிர்க்க வருவதாகத் தெரிகிறது. இவனை நீங்கள் அனைவரும் என் குறிப்பின் வழியே நின்று எதிர்த்துத் தொலைக்கவேண்டும். பார்த்தீர்களா இவனுடைய நெஞ்சை! என்னை ஒரு வீர னென்றும் என் கரத்திலுள்ளதை வில்லென்றும், என்னைச் சூழ்ந்த உங்களைச் சேனைகளென்றும் இவன் எண்ணவில்லை போல் இருக்கிறது. சை! இவன் என்னைக் கடந்து சென்று விடுவானாயின் என்னைப் பிறகு யார் மனிதனெனமதிப்பார் கள்? கடையேனாகிய என்னைத் தன் உடன்பிறந்தவனாக மதித்த என் நாயகனுக்கு உயிரைக் கொடுக்காவிடில் என்னை எல்லோரும் குகன் ஒரு நாய் என்று ஏசார்களா? இந்தப் பரதன், அந்தப் பிரபுவுடன் கூட நிகரற்ற பராக்ரம சாலியாகிய தம்பி ஒருவனிருக்கிறான் என்பதை ஒரு சிறி தும் எண்ணிப் பார்க்கவில்லைபோ லிருக்கிறது! அடடா இவன் நாடாள்வது, என் இறைவன் காடாள்வதா! பார்ப் போம் இவன் வல்லமையை! ஒருவரும் என்னுத்தரவின் றிப் படகு விடாதேயுங்கள். இவன் கங்கையைக் கடப்ப தைப் பார்ப்போம். வாருங்கள் ஒன்று சேர்ந்து" என்று சேனைகளைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டுக் கங்கைக் கரை

யின் தென்பக்கத்தில் வந்து நின்று பரதன் வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

3. பிறகு கொஞ்சநேரத்திற்கெல்லாம் பரதன் அவர்களை நெருங்கிவிட்டான். குகன் அவனை உற்றுநோக்கினான். பரதன், மரவுரி தரித்துக்கொண்டிருந்தான். அவன் மேனியெல்லாம் புழுதிபடிந்திருந்தது. அவன் முகத்தில் சந்தோஷமில்லாம லிருந்தது; துயரம் கல்லும் கனியும்படி மேலிட்டிருந்தது. பரதனுடைய இந்தக் கோலத்தைக் கண்ட குகன் "ஓ இவனையா நான் என் நாயகனுக்குப் பகைவனாகக் கருதினேன். இவனிடம் போர்க்கோலக் குறிகளே காணோமே" என நினைத்துத் தன் கரத்திலிருந்த வில் நழுவிக் கீழேவிழ மரம்போல் நின்று பரதனையும் அவனுடன் அவன் நிழல்போல் வந்த சத்ருக்நனையும் ஏற இறங்கப் பார்த்தான். உடனே, இவன் என் நாதன் ஸ்ரீராமச்சந்திரனைப்போலவே இருக்கிறான். இவனருகே வருபவன் லக்ஷ்மணனைப்போலவே இருக்கிறான். இவர்கள் கரையில்லாத துன்பக்கடலிலே மூழ்கியிருக்கின்றார்கள் என்பதை இவர்களுடைய முகமே காட்டுகிறது. இவர்கள் இராமபிரான் சென்ற திக்கை நோக்கித் தொழுத வண்ணமாகவே வருகிறார்கள். நான் இவர்களைப்பற்றி எண்ணியது மிகை! என் நாயகனோடு பிறந்தவர்களும் பிழை செய்வார்களோ?" என்று குகன் எண்ணிக் கொண்டிருக்கையில் பரதனும் சத்ருக்நனும் அவனை நோக்கி வெகுவிரைவாக வருவதைக் கண்டு இவனும் அவர்களை எதிர்கொண்டு சென்றான்.

4. இருவரும் ஒருவரை யொருவர் நெருங்கியதும் முறைப்படி வணங்கி அன்போடு தழுவிக்கொண்டனர். குகன்

பரதனை நோக்கி, "இவ்வளவு தூரம் தாம் எழுந்தருளிய தன் காரணம் யாது?" என்று மரியாதையோடும் பணிவோடும் கேட்டான். பரதன், "ஐயா! எங்கள் தந்தையார் தமது குலதருமந்தவறி நடந்தார். அந்தக்குறை தீர நான் என் தமயனாரை அழைத்துக்கொண்டு போக வந்தேன்" என்றான். இப்பேச்சைக் கேட்டதும் குகன் மூர்ச்சையடைந்து அடியற்ற மரம்போல் பூமியின் மீது விழுந்து பரதனுடைய இருதிருவடிகளையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "தருமகுணசீல! இப்பொழுதல்லவா உம்முடைய திருவுள்ளத்தை நான் உணர்ந்தேன். தாயின் சொற்படி அண்ணனுக்குரிய அரசைத் தம்பியாகிய நாம் அவனிருக்கையில் ஆள்வது முறையன்று என்று எண்ணித் தமயனைச் சமாதானப்படுத்தி அழைத்துக்கொண்டு போக இந்தக் கோலத்துடன் இங்கே வந்தீர். உம்முடைய இந்தப் பெரிய குணத்தைப் பற்றி யோசிக்கும்போது, ஆயிரம் ராமர் தோன்றினாலும் உமக்கு ஒப்பாகமாட்டார் என்று திண்ணமாய் என் மனத்திற்குப்படுகிறது. எல்லையற்ற புகழிற்குரிய நீர், சூரியன் எப்படித் தன்னுடைய கிரணங்களினாலே மற்ற ஒளிகளையெல்லாம் தன்னுள் அடக்கிக்கொள்கின்றானோ அப்படி உமது குலத்தோருடைய புகழையெல்லாம் நீர் உமது புகழாக்கிக்கொண்டீர்!" என்று கூறிப் புகழ்ந்தான்.

5. பரதன், "நண்பா! எழுந்திரு, இவ்வனாந்தரத்தில் என் தமையனாருக்கு நீ ஒரு அன்பனாய் ஏற்பட்டதை இப்பொழுது இங்கு நெருங்கும்போது எமது மந்திரி ஸுமந்திரர் சொல்ல நாங்கள் அறிந்தோம். உன் பெருமையையும் உன் குணத்தையும் அறிவோம். உன் அன்பு என்னை உருக்குகிறது. அப்பனே! ஸ்ரீராமபிரான் இங்கு

வந்திருந்தபோது, எங்கே தங்கியிருந்தார்?" என்று கேட்டான். குகன் பரதனையும் சத்ருக்நனையும் ஸ்ரீராமபிரான் தங்கியிருந்த இடத்திற்குக் கொண்டுபோய், "அவர்கள் இந்த இடத்திலேதான் தங்கியிருந்தனர்; இங்கேதான் நாணற்புற்களைப் பரப்பிப் படுத்துக்கொண்டிருந்தனர்" என்று காட்டினான். பரதன் உடனே "இந்த இடத்திலா என் அண்ணா படுத்துக்கொண்டிருந்தார்" என்று கேட்டு அங்கே படுத்துப் புரண்டு கண்ணீர் பெருகத் துயரமுற்றான். குகன் அவனைத் தேற்றினான். பிறகு பரதன் குகனை நோக்கி, "அவர் சென்றிருக்கும் இடத்திற்கு எங்களை இப்பொழுதே சேர்ப்பது உனது கடமையாகும்" என்றான். இதற்குள் பரதனுடன் வந்த, வஸிஷ்டர், கௌஸல்யை, கைகேயீ, ஸுமித்திரை, ஸுமந்திரர், பந்துமித்திரர், பிரஜைகள் யாவரும் அங்குவந்து சேர்ந்தார்கள். பிறகு குகன் படகுகள் கொண்டுவரும்படி வேடர்களுக்குக் கட்டளையிட்டான்.

---

## அத்தியாயம் 5.

### குகன் தன் நண்பனைக்கண்டு மகிழ்வது

குகனுடைய கட்டளைப்படி படகுகள் வந்து நின்றன. பரதன்முதல் எல்லோரும் படகேறினர். குகன் படகுகளைச் செலுத்த எல்லோரும் அக்கரை சேர்ந்து பரத்வாஜருடைய ஆசிரமம் போய் அங்குத் தங்கிப் பிறகு சித்ரகூடபர்வதம் சென்றனர். அங்குப் பரதன் ஸ்ரீராமரைக் கண்டு பணிந்து அவருடைய பாதுகைகளைப் பெற்றுக்கொண்டு எல்லோருடனும் திரும்பிவந்தான். குகன் அவர்களைக் கங்கைக்கு இப்புறங்கொண்டுவந்து விட்டு அன்போடு விடைகொடுத்து நகரத்திற்கு அனுப்பினான்.

2. இப்படி இவர்களிடம் அன்பு பாராட்டிய குகன் இராமபிரானுடைய வருகைக்காகக் காத்துக்கொண்டிருந்தான். ஸ்ரீராமச்சந்திரன் தன்னுடைய பிரதிஜ்ஞைப்படி பதினான்கு வருஷ வனவாசத்தையும் முடித்துக்கொண்டு பரதனைக் காணும் ஆவலோடு திரும்பி வந்தான். அதை யறிந்த குகன் ஸ்ரீராமச்சந்திரனைத் தன் சேனைகளுடன் ஓடோடியும்வந்து எதிர்கொண்டழைத்துப் பணிந்து எழுந்து நின்று அன்பின் மேலீட்டினால் கண்ணீர் பெருக்கினான். ஸ்ரீராமச்சந்திரன், அவனைத் தழுவிக்கொண்டு, அவன் கண்களைத் துடைத்து "தம்பி, எல்லோரும் சுகந்தானே?" என்று க்ஷேமஞ்செய்தி வினவினான். குகன் "தமது திருவருளால் யாவரும் சுகமே! தேவரீரை ஒரு கணமும் பிரியாமல் உடனிருந்து ஊழியம் செய்துவந்த லக்ஷ்மணரையும் தேவரீர் வருகிற பரியந்தம் விரதம் பூண்டிருந்த பரதரையும் போல் நானும் இருக்கவில்லையே! இந்த விசனம் என்னை வருத்துகிறது" என்று கூறிக் கண்கலங்கினான். ஸ்ரீராமச்சந்திரன், "நீ வேறு, பரதன் வேறு? நீ செய்த உதவியைப்போல் லக்ஷ்மணனாவது பரதனாவது எனக்குச் செய்ததுண்டோ? என் சொல்லைக் கடவாத நீ யல்லவா எனக்கு எல்லோரினும் பிரியமானவன் விசனியாதே" என்று கூறித் தேற்றினான்.

3. குகனும் அவருடன் அயோத்திக்கு வந்து ஸ்ரீராமபிரானுடைய பட்டாபிஷேக மகோற்சவங்கண்டு மகிழ்ந்தபின் வெகு மரியாதையுடன் சிருங்கபேரபுரம் திரும்பிச் சுகமாக அரசுபுரிந்து நீடூழி காலம் வாழ்ந்துவந்தான்.

---

# மாருதி

## நல்ல அடிமை

---

### அத்தியாயம் 1

மாருதியின் இளம்பருவமும், அவன் செய்கையும்

மாருதி என்பவன் அஞ்சனாதேவியின் மகன். கேசரி என்னும் வானர வீரன் இவனுடைய தந்தை. இவன் வாயுபகவானுடைய அம்சமாகப் பிறந்தவன். ஆகையினால் இவனுக்கு மாருதியென்னும் பெயர் உண்டாயது. இவன் அஞ்சனாதேவியின் மகனாதலால், இவனுக்கு ஆஞ்சநேயன் என்னும் ஒரு பெயருண்டு. மாருதி பிறந்தவுடன், தன் தாயை நோக்கிக் கைகுவித்து வணங்கி "இவ்விடத்தில் எனக்கு இனிய உணவு எது?" என்று கேட்டான். அஞ்சனாதேவி, "குளிர்ச்சிபொருந்திய சோலையிலுள்ள சிவந்த கனிகளெல்லாம் உனக்கு உண்ணத்தக்க உணவாகும்" என்று சொல்லிவிட்டுப் பழங்களைத் தேடிக் கொண்டுவருவதற்காகக் காட்டுக்குச் சென்றாள்.

2. இப்பொழுது சூரியனுதித்தது. அதைக் கண்ட மாருதி, இதுதான் நம்முடைய அன்னை சொன்ன சிவந்த கனியென்றெண்ணிச் சூரியன்மேல் பாய்ந்தான். இவன் வாயு வேகத்தைவிட மகா வேகமாகப் பாய்ந்தமையால் தேவர்களும் அசுரர்களும் கண்டு ஆச்சரியமடைந்து, "இவ்வேகம் இவனிடம் ஆரம்ப சூரத்வமாகாமல் என்றும் நிலைத்திருக்கக்கடவது" என்று வாழ்த்தினார்கள்; "விளையும்

பயிர் முளையிலே தெரியும் என்பதை இவனிடம் கண்டோம். இவன் அரக்கர்களை யெல்லாம் அழிக்கவல்ல வீரன் என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. இவன் பெரிய பலமுடையவனாக விளங்குவான்" என்று வியந்து பேசிக்கொண்டார்கள். மாருதியின் வேகத்தைக் கண்ட வாயுபகவான், "பாய்ந்து செல்லும் இவ்விளைஞன்மீது சூரியனுடைய உஷ்ணமான கிரணங்கள் குளிர்ந்த நிலாவைப் போல் படட்டும்" என்று அநுக்ரகஞ் செய்தான். சூரியன் அப்படியே சுடாமலிருந்தான். ஆயினும் மாருதி இப்படிப் பாய்ந்து வந்த செய்தியை அறிந்த இந்திரன் கோபங் கொண்டு அவனைத் தன் வஜ்ராயுதத்தினால் கன்னத்தில் அடித்து வீழ்த்தினான். அவன் கன்னங்கள் அதனால் சிதைந்தன. இது கண்டு வாயுபகவான் கோபங்கொண்டு காற்று வீசாமல் அடங்கி நின்றான். இப்பொழுது எல்லோரும் சுவாசம் விடமாட்டாமல் தவித்தார்கள். தேவர்கள் எல்லோரும் உடனே பிரமதேவரிடம் சென்று முறையிட்டார்கள். பிரமதேவர் வந்து மாருதியைத் தம் கரத்தினால் தடவினார். தடவியவுடன், வாட்ட முற்றுத் தரையிலே சாய்ந்த பயிர் தன் மீது மழை விழுந்த அளவில் தளிர்க்கும் தன்மையடைவது போல் இறந்துகிடந்த மாருதி உயிர் பெற்று எழுந்தான். மாருதி எழுந்ததும் வாயுபகவான் மகிழ்ந்தான். உடனே எங்கும் காற்று வீசத் தொடங்கியது. எல்லோருந் தொந்தரவு நீங்கி மகிழ்ந்து வாயுபகவானை வணங்கினார்கள்.

3. இந்திரன், மாருதியைப் பார்த்து, "என் வஜ்ராயுதத்தினால் புண்ணான தழும்பு நீங்கி சுகமாக இருக்கக் கடவாய். உனது கன்னம் சிதைபட்டுப் போனபடியால் நீ ஹநுமான் என்னும் பெயர்பெற்று உலகம் உள்ள அள

யும் நீங்காத பெரும்புகழ் பெறக்கடவாய்! இந்த வஜ்ராயுதத்தினால் உனக்கு மரணம் உண்டாகாதிருக்கக்கடவது!" என்று வரம் தந்தான். சூரியன், "பிரகாசம் பொருந்திய என்னுடைய கிரணங்களில் ஆயிரத்தில் ஒரு பங்கு உன்னிடம் விளங்கக் கடவது. உனக்கு எல்லா வித்தைகளையும் அறிந்து கொள்ளத் தக்க வல்லமை உண்டாகட்டும்" என்று வரந்தந்தான். வருணபகவான் "என் பாசத்தினாலும் தண்ணீரினாலும் இவனுக்கு முடிவு நேரிடாதிருக்கட்டும்" என்றான். யமன் "எனது கால தண்டத்தால் சாவில்லாமையும், நோயில்லாமையும், சண்டையில் சோர் வில்லாமையும் இவனுக்கு நான் கொடுக்கின்றேன்" என்று வரங்களைக் கொடுத்தான். குபேரனும், சிவபிரானும் "எங்கள் ஆயுதத்தால் இவனுக்கு மரணமுண்டாகத் திருக்கட்டும்" என்று வரங் கொடுத்தார்கள். பிரமதேவர், "தண்டமென்னும் என்னுடைய படைக்கலத்தினாலும் இவனுக்கு மரணமில்லா திருக்கட்டும். இவன் அறிவில் பெரியவனாய் விளங்கட்டும்; இவன் என்றும் அழியாத ஆயுளை யுடையவனாகட்டும்" என்று வரங்கொடுத்தார். விசுவகர்மா என்னும் தேவ தச்சன் "இவனுக்கு நான் செய்த தேவர்களுடைய ஆயுதங்களாலே மரணமில்லா திருக்கட்டும்" என்றான்.

4. இப்படி எல்லோரும் வரந்தந்த பிறகு பிரமதேவர் வாயுபகவானைப் பார்த்து, "உனது அம்சமான மாருதி மகாத்மாவாகவும் ஒப்பில்லாத வல்லமைசாலியாகவும் நினைத்த பொழுது நினைத்த உருவங்களை எடுத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்தவனாகவும் ஸ்ரீ ராமச்சந்திரனுக்கு நல்ல அன்பனாகவும் இருந்து பெருங்கீர்த்தியை அடைந்து கடைசியில் பிரமபதமும் பெறுவானாக!" என்று வரமளித்துச் சென்றார்.

## அத்தியாயம் 2

### மாருதி ஸ்ரீராமனுடைய நட்பைப் பெறுவது

இவ்வாறு வரங்களைப் பெற்றவுடன் மாருதி கர்வங் கொண்டு தன் விருப்பப்படி எங்கும்போய் அலை யத் தொடங்கினான்; முனிவர்களுடைய ஆசிரமங்களுக்குப் போய் ஹோமத்திற்காக வைத்திருக்கும் தயிரையும் பாலை யும் நெய்யையும் குடித்து அவர்களுடைய மரவுரியையும் ஹோமக் கருவிகளையும் எடுத்துப் பல பக்கங்களிலே வீசி யெறிந்து குரங்கினத்திற்குரிய சேஷ்டைகளைச் செய்தான். இதனால் முனிவர்கள் மாருதியின்மீது கடுங்கோபங்கொண்டு, "இவனுக்கு இவன் பலம் தெரியாமல் போகக் கடவது! எவரேனும் நெடுநேரம் எடுத்துச் சொன்னால் பிறகு தோன் றக்கடவது!" என்று சாபமிட்டார்கள். பிறகு மாருதி மன மொடுங்கி அடக்கமுடையவனானான்; கொடிய கோபமில் லாதவனானான்; அவ் வாசிரமங்களிலேயே உலாவிக்கொண்டி ருந்து அவர்களுடைய திருவருளுக்குப் பாத்திரமுடையவ னானான்.

2. மாருதி இப்படி இருக்கும்பொழுது, கிஷ்கிந் தையை வாலி என்னும் ஒரு வானரவீரன் ஆண்டு வந் தான். அவனுக்குச் சுக்ரீவன் என்னும் ஒரு தம்பி யிருந் தான். இவ்விருவருக்கும் சண்டை உண்டாயது. அச் சண்டையில் பெரிய பராக்கிரமசாலியாகிய வாலிக்கு அஞ் சிய அவனுடைய தம்பி சுக்ரீவன் மதங்கவனம் என்னும் ஒருவனம் வந்து சேர்ந்தான். அவ்வனத்தில் மதங்கமுனி என்னும் ஒரு முனிவர் வசிக்கின்றமையால், அதற்கு அப் பெயர் உண்டாயிற்று. இம்முனிவரின் சாபத்திற்கு அஞ்சி வாலி இங்கே வாராமலிருந்தான். இப்பொழுது இங்கிருந்த

மாருதி சுக்ரீவனோடு நட்புக்கொண்டான். முனிவர்களு டைய சாபப்படி மாருதி இப்பொழுது தன்வன்மை உண ராதவனாய் இருக்கின்றானல்லவா? ஆகையால் இவன் சுக் ரீவனுக்கு அடங்கியவனாயிருந்தான்; சூரியனிடம் சென்று நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் இன்னும் மற்ற கலைகளையும் ஒரே நாளில் ஓதி யுணர்ந்து உலகத்திற்கு ஒரு குருவைப்போல் விளங்கினான்; அன்பு, தயை, பொறுமை முதலிய நற்குணங்களுடையவனாயிருந்தான். நினைத்த காரியங்களை யெல்லாம் நினைத்தபடி முடிக்கத்தக்க சாமர்த்தியமு மிவனிடம் விளங்கியது. பல சொல்வானேன், விண்ணுலகத்திலும் இம் மண்ணுலகத்திலும் இவனுக்கு ஒப்பாவார் ஒருவருமில்லையென்று புகழ இவன் சிறந்து நின் றான். இவனுடைய இப்படிப்பட்ட குணங்கண்டு தேவர் கள் மகிழ்ந்து கொண்டாடினார்கள். தருமம் தழைத்தோங் கத் தொடங்கியது. அதர்மம் மறையலாயிற்று.

3. மாருதி இவ்வாறு புகழ்பெற்று விளங்குகையில், வனவாசஞ் செய்வதற்காக வந்த ஸ்ரீராமச்சந்திரனும் லக்ஷ்ம மணனும் இங்கே வந்தார்கள். இவர்களைக் கண்டதும் சுக் ரீவன், தன் பகைவனாகிய வாலியின் ஏவலாலேவந்த பகை வர்களோ என்று இவர்களின்மீது சந்தேகங் கொண்டான். உடனே அவர்களை இன்னாரென்று தெரிந்துகொண்டுவரும் படி மாருதியை அனுப்பினான். மாருதி ஒருவரைக் கண்ட வளவில் அவரை இன்னாரென்று அறியும் சக்தியுடையவ னாகையால் அவன் ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நல்ல குடி யிலே பிறந்த நீதிமான்கள் என்று தெரிந்துக்கொண்டான். ஆகையால் அவன் ஒரு பிரமசாரியைப்போல் வேஷம்பூண்டு ஸ்ரீராமச்சந்திரனிடம் வெகுபணிவோடு சென்று வந்தனஞ்

செய்து "மகாபராக்கிரம சாலிகளாகவும் நல்ல குணமுடைய வர்களாகவும் விளங்கும் நீவிர்யாவர்? இங்குவந்த காரணமென்ன? நான் சுக்ரீவன் என்னுமொரு வானர ராஜன் அனுப்பவந்தவன். என் பெயர் மாருதி. சுக்ரீவராஜன் உங்களுடைய நட்பை விரும்புகிறான். நான் அவனுடைய மந்திரி; ஜாதியில் வானரன்; நினைத்தபடி உருவங் கொள்ளத் தக்க சக்தி வாய்ந்தவன். ஆகலால் இங்கு, இப்பொழுது பிரமசரிய வேஷத்தோடு வந்திருக்கின்றேன்" என்றான்.

4. ஸ்ரீராமபிரான், அருகிலிருந்த லக்ஷ்மணனின் முகத்தைப்பார்த்து, "இவர் இவ்வளவு தூரம் பேசியும் இவருடையவாக்கில் ஓர் அபசப்தமாவது வரவில்லை. ஆகையால் இவர் வியாகரண பண்டிதர் என்பதில் சந்தேகமில்லை. இவர் சிறிதும் சந்தேகத்திற்கு இடமில்லாமற் பேசுவதைக் கவனித்தாயா? இவர்க்கு அமைச்சர்க்குரிய மரியாதை செய்து நட்பை உண்டாக்கத் தக்க மறுமொழி சொல்லு" என்றான். லக்ஷ்மணன் மாருதியை நோக்கி "புலவீர்! சுக்ரீவனுடைய குணங்களை அறிந்துகொண்டோம். அவ்வானரராஜனைக் காண்போம்" என்றான். மாருதி, "ஸந்தோஷம்! சுகமடைந்தோம்! அப்படியே செய்வோம்? நாம் யார்? இங்கு இப்படித் தவக்கோலம் பூண்டு வந்திருப்பதன் காரணமென்ன?" என்று கேட்டான். லக்ஷ்மணன், ஸ்ரீராமச்சந்திரனுடைய கட்டளைபின்படி தங்கள் வரலாற்றைச் சொல்லிக்கொண்டே வந்து, கடைசியில், "நாங்கள் பஞ்சவடியில் வசித்தோம். அப்பொழுது என் அண்ணியாரை எவனோ அபகரித்துக்கொண்டு போய்விட்டான். அவனைத் தேடிக்கொண்டு வருகின்றோம்" என்றான்.

5. இதைக் கேட்டதும், மாருதி, "நல்லது, அப்ப டியா? எங்களரசன் உங்களுடைய விஷயத்தில் உங்களுக்கு வேண்டிய உதவி புரிவான். அவனுடைய மனைவியை வாலி என்னும் அவன் அண்ணன் கைப்பற்றிக்கொண்டிருக்கிறான். அதனால் அவன் பெருந்துன்பத்துடன் அவனுக்கு அஞ்சிய வனாய் இவ்வனத்திலேயே வசிக்கிறான்" என்றான். லக்ஷ்மணன், உடனே ஸ்ரீராமனை நோக்கி, "அண்ணா, இவரும் நம்முடைய உதவியை விரும்புவதாய்த் தெரிகிறது. இவர் ஸத்திய சீலர் என்பது நன்றாய் விளங்குகிறது" என்றான். இப்பொழுது மாருதி உடனே வானர வடிவமடைந்து, ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களைத் தனதிரு தோளிலும் ஏற்றிக் கொண்டு வந்தகாரியம் பலித்ததென்னும் பெருமகிழ்ச்சியோடு சுக்ரீவனிடம் சென்றான்.

---

## அத்தியாயம் 3

### மாருதி கடலைக் கடப்பது

ஸ்ரீராமச்சந்திரனுடைய வரலாற்றைச் சுக்ரீவனுக்கு விவரமாய்ச் சொன்னான். சுக்ரீவன் ஸந்தோஷமடைந்து ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களோடு நட்புக் கொண்டான். ஸ்ரீராமச்சந்திரன், சுக்ரீவனது அண்ணனாகிய வாலியை வதைப்பதாக வாக்களித்தான். சுக்ரீவனும் ஸீதையை மீட்டுத் தருவதாக உறுதி கூறினான்.

2. பிறகு ஸ்ரீராமச்சந்திரன் தான் கொடுத்த வாக்குப்படி வாலியைக் கொன்று சுக்ரீவனைக் கிஷ்கிந்தைக்கு அரசனாக்கினான். சுக்ரீவனும் ஸீதையைத் தேடிக் கண்டுபிடிக்க நாலா பக்கங்களிலும் வானரப்படைகளை அனுப்பினான்; மாருதியைத் தென்றிசையை நோக்கிச் செல்லும்படி ஏவி

ஞன். மாருதி எப்படியும் ஸீதையைத் தேடிக் கண்டுபிடிப்பான் என்னும் நம்பிக்கை சுக்ரீவனுக்குண்டு. ஆகையால் அவன் மாருதியைப் பார்த்து, "வானரவீர, பூமியிலாவது, ஆகாயத்திலாவது, நீரிலாவது செல்வதற்கு உனக்குத் தடையிருக்குமென்று நான் நினைக்கவில்லை. உன் சாமர்த்தியத்திற்கு ஒப்பான சாமர்த்திய முடையவர்களையும் நான் அறியேன். ஆகையால் ஸீதையை அடையும் வழியை நீதான் தேடவேண்டும்" என்றான். ஸ்ரீராமச்சந்திரனும் மாருதியினிடம் நம்பிக்கை கொண்டு மிகமகிழ்ச்சியடைந்து தன் கைக்கணையாழியை அவனிடம் கொடுத்து, "இந்த அடையாளத்தினால் ஜானகி உன்னை என்னிடமிருந்து வந்தவனென்று தெரிந்து கொள்வாள். உன் வல்லமையும் சுக்ரீவன் உன்னிடத்தில் கொண்டுள்ள நம்பிக்கையும் காரியசித்தியாகுமென்பதை எனக்குச் சொல்லுகின்றன" என்று கூறி அனுப்பினான். மாருதி மோதிரத்தைப் பெற்றுக் கொண்டதும் தலைமேல் கைகூப்பி ஸ்ரீராமனை வணங்கிப் பெரிய வானர சேனைகளுடன் புறப்பட்டுச் சென்றான்.

3. இப்படிப் புறப்பட்ட மாருதி, மலைகளையும் மலைக் குகைகளையும், காடுகளையும் மலைச் சிகரங்களையும், கடக்க முடியாத ஆறுகளையும் கடந்து சென்று தேடினான்; கடைசியில் ஒரு பிலத்துவாரத்திற்குள் வானர வீரர்களுடன் சென்று தேடி ஸீதையை அங்கேயும் காணாமல் மிகவும் வருத்தப்பட்டான். அதிலிருந்து வெளிவர வழிதெரியாமல் அவஸ்தைப்பட்டுக் கடைசியில் சுயம்பிரபை என்கிற ஒரு தபோதனியின் உதவியினால் வெளியே வந்தான். இதற்குள் குறித்துச் சொல்லிய தவணை கடந்து விட்டமையால் வானர வீரர்களெல்லாரும் பெருந்துயரமடைந்து மயங்கினார்

கள்; காரியசித்தியில்லாமல் காலமுங்கடந்த பிறகு அரசன் முன்பு நாம் செல்வதைவிட இங்குள்ள குகைகளில் எங்கே னும் ஒளிந்து கொண்டிருந்து காலங் கழிக்கலாமென்று தீர் மானங் கொண்டார்கள். மாருதி, அவர்களை நோக்கி; "அப் படிச் செய்தோமானல் நாம் சுக மடையமாட்டோம். அரச னிடம் போய் நாம் உண்மைபேசிக் கண்யம் பெறுவோம். உண்மை சொல்லிக் கெட்டவர்களுண்டா" என்று நியா யங் கூறினன்.

4. இப்படி மயங்கி நிற்கும்போது, இவர்களை இன்னு ரென்று தெரிந்துகொண்ட சம்பாதி என்னும் ஒரு கழுகு, "ஸீதையை இராவணன் என்னும் ஓர் இராக்ஷஸன் எடுத் துக் கொண்டுபோய் இலங்கையில் வைத்திருக்கின்ருன்" என்று கூறி இலங்கை இருக்குமிடத்தையும் சொல்லியது. உடனே வானரர்களெல்லாரும் ஸந்தோஷமடைந்து ஆர வாரித்தார்கள். பிறகு மாருதி எல்லோருடனும் கடற்கரைக் குச் சென்ருன். எல்லோரும் கடலைப்பார்த்து இதை எப் படித் தாண்டி இலங்கைக்குச் செல்வதென்று மலைத்து நின்ருர்கள். இப்பொழுது மாருதிக்கு அவனுடைய பலத் தைச் சாம்பவான் என்பவன் நினைப்பூட்டினன். நினைப்பூட் டியவளவில் மாருதி உற்சாகமடைந்து, எல்லோரையும் பார்த்து, "நண்பர்களே! மலைகளையெல்லாம் பெயர்த்தெறி யும் வாயுபகவானுடைய அம்சமல்லவா நான். தாண்டுவதில் எனக்குச் சமமானவர்கள் எவருமிருக்க மாட்டார்கள். நான் என் கையினலே இந்தக் கடல் நீரை இறைத்துத் தரை தெரியும்படி செய்வேன்! என் தொடையின் வேகத்தினல் இந்தக் கடலை விலக்குவேன்; பூமியைப் பிளப்பேன்! மலை களைத் தூளாக்குவேன்!" என்று வீரம் பேசி, "என் மனத் தில் உற்சாகம் பொங்குகிறது! ஸீதாதேவியை நான் நிச்சய

மாகக் காண்பேன்! நான் இதோ இந்த மகேந்திரகிரியின் மீதேறி நின்று இந்த நிமிஷமே தாண்டுகிறேன்! அப்போது பூமி என் வேகத்தினால் நடுங்கும்! நீங்கள் அஞ்ச வேண்டாம். இதோ தாண்டுகிறேன்" என்று கூறி "ஸ்ரீ ராமஜயதி! வீரியவானான ஸ்ரீராமருக்கும் இளையவருக்கும் பிராட்டியாருக்கும் நமஸ்காரம்" என்று அவர்களுக்கு வந்தனம்செய்து அங்கிருந்த மகேந்திரகிரி யென்னும் மலைமேலேறி நின்று தெற்கு நோக்கித் தாண்டினான். மாருதி அந்த மலையிலிருந்து எழுந்த வேகத்தினால் அந்த மலை நிலைகுலைந்து கீழே அழுந்தியது. அங்கிருந்த அநேக விருக்ஷங்கள், மாருதியின் தொடை வேகத்தினால் அவனோடு கூடவே கிளம்பி ஆகாயத்திற் சென்றன.

5. இப்படிச் செல்லும் வானரவீரன், வடக்கிலுதித்துத் தெற்கே செல்லும் வாலுள்ள ஒரு கொள்ளியைப் போலத் தோன்றினான்; ஆகாயத்திலிருந்து நீண்டு விழும் ஒரு சூரியனைப்போலவும் தோன்றினான். கடல் நீர் கொந்தளித்தது. கடலிலே வசிக்கும் மீன்களும் முதலைகளும் மற்றுமுள்ள ஜலராசிகளும் நன்றாய்த் தெரியும்படி நீர் பிளவுண்டது. வாயுவைப்போல் மேகங்களைத் தள்ளிக்கொண்டு போகிற மாருதி பறவைகளின் நடுவே பக்ஷி ராஜனைப்போல் விளங்கினான்.

6. மாருதி இப்படிச் செல்லுகையில் கடலின் நடுவில் சூரியன் மேகத்தை விலக்கிக்கொண்டு பிரகாசிப்பது போல் மைநாகம் என்னும் ஒரு பர்வதம் ஜலத்தைக் கிழித்துக் கொண்டு மேலே எழும்பியது. இப்படி எழும்பிய மலையைக் கண்ட மாருதி "ஓ இது நமக்கோர் இடையூறாகத் தோன்றியிருக்கிறது" என்றெண்ணி, தன் மார்பாலும் காலாலும் அதனை மோதி வாயுவானது மேகத்தைத் தள்ளுவ

துபோல் தள்ளினன். இப்பொழுது அந்த மலையின் மேலே ஒரு சுந்தரபுருஷன் தோன்றி நின்று, "எ மாருதி, நான் மலைராஜன்! அரிய பெரிய காரியத்தைச் செய்ய முன்வந்திருக்கும் நீர் இம்மலையில் சற்றுத் தங்கி இளைப்பாறிப் பிறகு செல்லும்; சமுத்திர ராஜன் உமக்கு மரியாதை செய்ய விரும்புகின்றார்" என்றான். மாருதி, "நல்லது! சந்தோஷம்! திருப்தியடைந்தேன்! அதிதி பூஜையையும் அங்கீகரித்தேன். நான் அவசர காரியமாகப் போகிறேன்; அஸ்தமனமாகப் போகிறது. நான் நடுவில் நிற்பதில்லையென்கிற பிரதிஞ்ஞை செய்துகொண்டிருக்கிறேன்" என்று கூறிச் சிரித்துக்கொண்டு ஆகாயத்திலே பாய்ந்தான்.

7. இதுகண்ட தேவர்களெல்லோரும் மாருதியை வாழ்த்தினர்கள். இப்படிப்பாய்ந்து சென்ற மாருதி வெகு சீரைவில் இலங்கைத்தீவை நெருங்கினன். அத்தீவைக் கண்டதும், தன் சரீர ஆகிருதியைக் கண்டால் இராக்ஷஸர்கள் கலகஞ் செய்வார்களென்று எண்ணித் தன் வடிவத்தை ஒடுக்கிக்கொண்டு சென்றான்; பிறகு இலங்கையை அடைந்ததும் தன் சுயரூபத்தை எடுத்துக்கொண்டு நாற்புறமும் பார்த்து, இலங்கையின் அழகையும் வளப்பத்தையும் கண்டு வியந்தான்; பெரிய அகழிகளையும் மதிலையும் கண்டு புகழ்ந்தான். அப்பால் அங்கிருந்த கோட்டை வாயிலிலே புகுந்து இலங்கைக்குள்ளே செல்ல எண்ணி அதனருகே சென்றான். அக்கோட்டை வாயிலுக்குக் காவலா யிருந்த இலங்கைமாதேவி அவனை எதிர்த்து உள்ளே போகக் கூடாதென்று தடுத்தாள். மாருதி அவளை ஒரு குத்தில் யமலோகத்திற்கு அனுப்பிவிட்டு இலங்கைக்குள் சென்று பூனையின் அளவாக வடிவங்கொண்டு அங்குமிங்கு மெங்குமாய் ஸீதாபிராட்டியை வீட்டுக்கு வீடு தாவிச்சென்று தேடினன்; அங்கெங்கும்

காணுமல், விசித்திரமாய் விளங்கும் இராவணன், கும்பகர்ணன், விபீஷணன் இம் மூவருடைய மாளிகைகளிலும் சென்று தேடிக் கடைசியில் "இன்னும் எங்குச் சென்று தேடுவேன்! ஐயோ! ஸீதாதேவியார் இறந்துவிட்டார்கள் போலிருக்கிறது. அந்தத் துஷ்டன் கொன்றிருப்பான். அந்தோ! இனி நான் எப்படி சுக்ரீவனிடம் போவேன்? அந்த ஆசையை இனி மறந்துவிடத்தான் வேண்டும். என் கஷ்டமெல்லாம் வீணுயிற்று!" என்று எண்ணி மிகவும் வருத்தப்பட்டான்.

8. அப்பால், உடனே, "சை! என்ன இப்படி எண்ணி உற்சாகத்தை இழக்கின்றேன் மூடன்! உற்சாகமல்லவா ஜயத்திற்கு முதற்காரணம்! உற்சாகமல்லவா எல்லோருக்கும் காரியசித்தியைத் தருவது" என்று தனக்குள் சொல்லிக்கொண்டு உற்சாகமடைந்து, பழையபடி தேடத் தொடங்கி, பர்ணசாலை, பூமாளிகை, நர்த்தனசாலை, நிலைமாளிகைகள், நாற்சந்தி மண்டபங்கள் முதலிய இடங்களிலும் தேடினுன். மலைகளிலும் தேடத் தொடங்கி உயர்ந்த இடங்களில் ஏறியும் அங்கிருந்து குதித்தும் அடிக்கடி நின்றும் மலைக்குள் சென்றும் அங்கிருந்து வெளிப்பட்டு வந்தும் தேடினுன். எங்குங் காணுமையால், ஓரிடத்திற் போய் நின்று "ஐயோ நானென்ன செய்வேன்! ஸ்ரீராமாபிரானின் முன் நான் எப்படிப் போவேன்? என்னுடைய இவ்வளவு கஷ்டத்திற்கும் பயனென்ன? அந்தோ! நான் இறந்தாலன்றி வேறு வழியைக்காணேன்" என்று எண்ணிப் பிறகு சற்றுப்பொறுத்து உடனே சினங்கொண்டு, "அந்த ஸீதா தேவியை அபகரித்துச் சென்ற பாதகனைக்கொன்று இவ் விலங்கையையும் அழிப்பதே எனக்கு நீதியாகு மல்லது

சாவது நீதியாகுமா? மனத்தளர்வின்றி இன்னும் முயற்சி செய்வதை விட்டுத் தளர்வடைகின்றேன்!" என்று கருதிச் சற்று நின்ற "நான் ஏன் இப்படி மயங்குகிறேன்? நான் கடலைக் கடந்துவிட்டதனால் கர்வங்கொண்டேன்; என் ஐயன் ஸ்ரீராமச்சந்திரனுடைய பெருமையை மறந்தேன்; அதனாலுண்டான மயக்கமிது!" என்றுணர்ந்து ஸ்ரீராமனை எண்ணினான். உடனே, "ஓ இப்போதல்லவா சம்பாதி சொன்னது நினைவுக்குவருகிறது! தேவியார் அசோக விருக்ஷத்தின் அடியிலிருப்பதாகச் சம்பாதி சொல்லவில்லையா? அங்குச் சென்று தேடுகிறேன்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டு அசோக வனத்திற்குச்சென்றான்.

---

## அத்தியாயம் 4

### மாருதி ஸீதையைக் கண்டு சூடாமணி பெறுவது!

இராவணன் எடுத்துக்கொண்டுவந்ததும் ஸீதையை அவன் அசோகவனத்திலே சிறைவைத்தானல்லவா? இங்கே, ஸீதை அரக்கிகள் செய்யும் துன்பமும் இராவணன் பேசும் பேச்சும் பொறுக்கமாட்டாமல் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருந்தாள். மாருதி இப்பொழுது இங்கே போய்ச்சேர்ந்தான். ஸீதாதேவி தன் நாயகன் பேரிலேயே நினைவாயிருந்து வருந்துவதைக் கண்டு மாருதியும் வருந்தினான். அவ்வம்மையின் பதிபக்தியைக் கண்டு "இவள் தூயவள்" என்று நிச்சயித்து மகிழ்ந்தான். உடனே அவ்வம்மையைக் கண்டு பேச எண்ணி அங்கிருந்த அரக்கிகளையெல்லாம் ஒரு மந்திரத்தினாலே தூங்கும்படி செய்தான். அரக்கிகள் தங்கள் அமளி அடங்கித் தூங்கியதும் ஸீதாதேவி ஒரு குருக்கத்தி மரத்தினடியிற் போய்த் தன்

'னுயிரை மாய்த்துக் கொள்ள யத்தனித்தாள். மாருதி இச்ச மயம் ஸீதாதேவியின் செவியிலே விழும்படி 'ஸ்ரீராமா ஸ்ரீரா மா' என்று ஸ்ரீராமச்சந்திரனுடைய பெயரைச் சொல்லித் தன் வரவைத் தெரிவித்தான். ஸ்ரீராமச்சந்திரனுடைய பெயரைக் கேட்டவளவில் ஸீதை திரும்பிப் பார்த்தாள். மாருதி உடனே அவளுக்கு முன்வந்து பணிந்து நின்று தான் இன்னனென்று சொல்லி ஸ்ரீராமச்சந்திரன் கொடுத்த கணையாழியை அவளிடம் கொடுத்து அவள் துயரத்தை மாற்றினன்.

2. ஸீதை, தீராத தன் துயரத்தை தீர்த்த மாருதியை நோக்கி, "ஸ்ரீராமபிரானுக்குத் தூதனாய் வந்து எனக்கு என்னுயிரைத் தந்த உனக்கு நான் என்ன நன்மை செய்யப் போகிறேன்? அப்பனே! இந்த உலகமெல்லாம் அழிந்தகாலத்திலும் நீ இப்படியே இருக்கக்கடவாய்!" என்று வாழ்த்தினள்; "நீ எப்படி இந்தக் கடலைக் கடந்து இங்கே வந்தாய்?" என்று கேட்டாள். மாருதி, "அம்மணி, உமது நயகனும் என்னை ஆட்கொண்ட பிரபுவுமாகிய ஸ்ரீராமபிரானின் திருவடித் துணைகொண்டுதான் நான் கடலைக் கடந்தேன்!" என்று கூறி ஸ்ரீராமனிடம் தான் கொண்டிருக்கும் அன்பை விளக்கினன். ஸீதை "நல்லது. இந்தச்சிறிய உருவத்துடனா நீ கடலைக் கடந்தாய்?" என்று கேட்டாள். உடனே மாருதி, "அம்மணி! நான் அப்போதுகொண்டிருந்த உருவம் வேறு? அதனை இதோ காட்டுகிறேன்" என்றுரைத்து ஸீதைக்கு விசுவரூபதரிசனம் காட்டினன். ஸீதை அவ்வுருவத்தைக் கண்டதும், தன் துயரமெல்லாம் நீங்கியதாக எண்ணி மாருதியை வாழ்த்தினுள்; 'அரக்கர்கள் அழிந்தார்கள்' என்று தீர்மானித்தாள்;

"என்பழி பறந்தது, புகழ் சிறந்தது" என்றாள். மாருதி, "ஸ்ரீராமபிரான் வந்து உம்மை மீட்பது திண்ணம்" என்று ஸீதைக்கு உறுதி சொல்லிப் பழைய உருவங்கொண்டு வணங்கித் தன்னை அனுப்பும்படி கேட்டான். ஸீதை இப்பொழுது மாருதியினிடம் தன் சூடாமணியை அடையாளமாகக் கொடுத்து "அப்பனே! நீ போய் சீக்கிரமாக நாதனை அழைத்துவா" என்று சொல்லி அனுப்பினாள்.

---

## அத்தியாயம். 5.

### மாருதி வெகுமதி பெறுவது.

மாருதி, ஸீதையைத் தொழுது விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு அங்கிருந்து வெளிவந்து பகைவர்களாகிய அரக்கர்களுடைய பலத்தை அறிய எண்ணி, அந்த அசோகவனத்திற்குள் பழையபடி புகுந்து அதனை இங்குமங்கும் ஓடி அழித்தான். இதனை அறிந்த அரக்கர்கள் இராவணனிடம் செய்தி சொல்லி முறையிட்டார்கள். இராவணன், ஆயிரக்கணக்காக அரக்கர்களை ஏவி மாருதியை எதிர்க்கும்படி செய்தான். மாருதி அவர்களையெல்லாம், சிங்கமொன்று ஆட்டுமந்தையை அழிப்பது போல் அழித்து "இன்னும் வருபவர்கள் வரலாம்" என்று கூறி வீரம்பேசினான். அப்பால் இராவணன் தன் மந்திரிகளை அனுப்பினான். அவர்களையும் மாருதி ஒழித்துவிட்டான். பிறகு இராவணனுடைய மகன் அக்ஷய குமாரன் என்பவன் வந்தான். அவனும் மாருதியின் முன்பு நிற்கமாட்டாமல் உயிர்விட்டான். அவன் மடியவே அவனுடைய அண்ணனாகிய இந்திரஜித்து என்பவன் மாரு

தியை வெகு பலமாய் எதிர்த்து அவனைப் பிர்மாஸ்திரத்தி ஞலே கட்டி இராவணன் முன்பு கொண்டுபோய் நிறுத் தினன்.

2. இராவணன், பெருமகிழ்ச்சி யடைந்து தன்மகன் இந்திரஜித்தைப் புகழ்ந்து தழுவிக்கொண்டு பிறகு மாரு தியைப் பார்த்து, "குரங்கே நீ யாரடா?" என்று கேட் டான். மாருதி உடனே தன் தேகத்தை உதறிக்கொண்டான். பிர்மாஸ்திரத்தின் பலங்குறைந்து நழுவியது. பிறகு மாருதி சந்தோஷத்துடன் தன் வாலையே ஒரு சிங்காதனம்போல் ஆக்கிக்கொண்டு அதிலேறி உட்கார்ந்து இராவணனை நோக்கி "அடே ராவணு! நான் ராமசாமி தூதனடா, என் பெயர் அநுமானடா" என்று ஒருதரம் அடே என்ற தற்கு மூன்றுதரம் அவனை அடே என்றழைத்து அவனுக்கு விடை கொடுத்தான். இராவணன், "நீ எங்கே வந்தாய்? தூதனாக வந்த நீ இப்படியேன் போர் செய்தாய்?" என்று கேட்டான்.

3. மாருதி, "நீ ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவினுடைய மனைவியை அவரில்லாத சமயத்தில் பஞ்சவடியி லிருந்து அபகரித்துக்கொண்டு வந்து சிறை வைத்திருக்கிரு யல்லவா? அவ்வம்மையாரை உரியவரிடம் சேர்ப்பித்து நீ அவருக்கு நல்லவனாகவேண்டும் என்பதை உனக்குச் சொல்ல என்னை என் இறைவனாகிய சுக்ரீவனனுப்பினன். நீ வேதசாஸ்திரங் களை ஓதி உணர்ந்திருந்தும் இந்தச் செய்கை செய்யத் துணிந்தது உன் பெருமைக்கும் உன் வீரத்திற்கும் மிகவும் இழிவாகும்" என்று தெரிவித்து, "எனக்கு உன்னைக் காட்டுவாரில்லாமையால் அசோகவனத்தை அழித்துப்போர் செய்தேன்" என்று தான் போர்புரிந்ததற்குக் காரணமும் கூறினன்.

4. இராவணன், மாருதியின்மீது இப்பொழுது பெருங் கோபங்கொண்டு, "இந்தக்குரங்கை இப்பொழுதே கொல்லுங்கள்!" என்று கட்டளையிட்டான். அருகிலிருந்த விபீஷணன் "தூது வந்தவனைக் கொல்வது நியாயமல்ல" என்று கூறித் தடுத்தான். இராவணன், "அப்படியாயின், இவன் வாலிலே தீயைவைத்து ஊரைச் சுற்றிக்கொண்டு போய்த் துரத்திவிடுங்கள்" என்று கட்டளையிட்டான். அரக்கர்கள் அப்படியே செய்தார்கள். மாருதியை அந்தத் தீ கொஞ்சமும் சுடவில்லை. மாருதி, ஸீதாதேவியின் கற்பே அதற்குக் காரணமென்றறிந்து மகிழ்ந்து ஸீதையைக் கைகுவித்துத் தொழுதான். பிறகு "இவ்வரக்கர்கள் என் வாலில் தீயை வைத்தது இந்த ஊரைக்கொளுத்தி அழிப்பதற்குத் தான்" என்று சொல்லிக்கொண்டு, அக்நி தேவனுக்கு அவ்வூரை இரையாக்கத் துணிந்து அப்படியே இலங்கையைக் கொளுத்தினான். அரக்கர்களெல்லோரும் மூலைக்கு மூலை அங்குமிங்கும் அலறிக்கொண்டு ஓடித் தப்ப வழியில்லாமல் இறந்தார்கள். அநேக அரக்கர்கள் கடலிலே போய் விழுந்தார்கள். மாருதி கடலிலேயும் தன் வாலைத் தோய்த்து அதையும் கொதிக்கும்படி செய்து அதில் விழுந்தவர்களையும் கொன்றான்.

5. இப்படி அரக்கர்களழியவே, அந்த நெருப்பு ஸீதையிருக்கும் அசோகவனத்திலும் சென்று ஸீதைக்குத் துன்பத்தை விளைத்ததோ என்னும் சந்தேகங்கொண்டு மாருதி அஞ்சினான்; "அந்தோ! எரிகிற நெருப்பை நீரினாலே அணைப்பதுபோல் கோபத்தை அடக்குகிறவனல்லவா புருஷன்? கோபத்தின் வசமானபின் எவன்றான் பாபத்தைச் செய்யமாட்டான்" என்று எண்ணி அசோகவனத்திற்குச் சென்று பார்த்தான்; அங்கே ஸீதைக்கு யாதொரு தீங்கும்

சேரிடாதிருக்கக் கண்டு மகிழ்ந்து தேவியைப் பணிந்து விடை கொண்டு புறப்பட்டுக் கடலைக்கடந்து மகேந்திர கிரியின் சிகரம் போய்ச் சேர்ந்தான்.

6. பின்னர் மாருதி அங்கிருந்த வானரவீரர்களுடன் ஸ்ரீராமபிரானிருக்கும் ரிசியமூக பர்வதச் சாரலுக்குச் சென்று அவனிடம் ஸீதையைக்கண்ட செய்தி கூறி அவள் கொடுத்த அடையாளமாகிய சூடாமணியைக் கொடுத்து நமஸ்கரித்தான்; இலங்கையில் நடந்த செய்திகளை யெல்லாம் விவரமாகச் சொன்னான்; ஸீதை தெரிவித்த செய்தியை வெகு விநயமாகவும் அவள் குற்றமற்றவள் என்பது ஸ்ரீராமனுடைய மனத்திலே படும்படியாகவும் தெரிவித்தான்.

7. ஸீதை இருக்கிறாள் என்ற செய்தி கேட்ட ஸ்ரீராமச்சந்திரன் உடனே இலங்கைக்குச் சென்று இராவணனை எதிர்த்துப் போர்புரிந்து ஸீதாதேவியை மீட்கச் சித்தங் கொண்டான். சுக்ரீவன் அவனுடைய எண்ணமறிந்து ஏராளமான சேனைகளைத் திரட்டினான். எல்லோரும் சேர்ந்து தென் கடற்கரை சென்றார்கள். அங்குச் சென்றதும் கடலைக் கடக்கக் கடலில் ஒரு பெரிய அணை கட்டத் தீர்மானித்து ஸ்ரீராமன் மாருதி முதலிய வானரர்களுக்குக் கட்டளை யிட்டான். வானரர்கள் மலைகளையும் மரங்களையும் கணக்கில்லாமல் கொண்டுவந்து நிரப்பி மூன்று நாளில் பெரிய அணைகட்டி முடித்தார்கள். பிறகு அவ்வணைவழியே நடந்து கடலைக் கடந்து எல்லோரும் இலங்கைக்குச் சென்றார்கள்.

8. இலங்கையில் ஸ்ரீராமச்சந்திரனுக்கும் இராவணனுக்கும் பெரிய சண்டை நடந்தது. அந்தப் பயங்கரமான சண்டையில் எட்டாவது நாளில், இராவணனுடைய மக

னும் வீரனுமாகிய இந்திரஜித்தென்பவன், பிர்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து, அநேகம் பேர்களைக் கொன்றுவிட்டான். மீதியாக இருந்தவர்களையெல்லாம் நினைவுடனும், நினைவு கெட்டும், குற்றுயிராகவும், செயல் கெட்டும், மூர்ச்சையாயும் கீழே விழும்படி செய்தான். ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரும் இப்படியாகவே, யுத்தகளம் அலையடங்கிய கடல்போலிருந்தது. மாருதியும் விபீஷணனும் இந்த அஸ்திரத்தினாலே வாதைப்படாம லிருந்தார்கள். இவர்களிருவரும் தாங்கள் இப்பொழுது என்ன செய்வதென்கிற ஆலோசனை ஒன்றுந் தோன்றாமல் இங்குமங்கும் போய் யாரேனும் பிழைத்திருக்கின்றனரோ என்று தேடிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; அங்கொரு பக்கத்தில் ஜாம்பவான் என்பவர் உயிருடன் கீழே கிடக்கக் கண்டார்கள். ஜாம்பவான், விபீஷணனைப் பார்த்து, "மாருதி பிழைத்திருக்கிறானா?" என்று கேட்டார். விபீஷணன் "மாருதி பிழைத்திருக்கிறான்" என்று சொன்னான். ஜாம்பவான் "அவன் பிழைத்திருந்தால் எல்லோரும் பிழைக்கலாம்!" என்று சொல்ல, இப்பொழுது அருகே நின்ற மாருதி ஜாம்பவானை வணங்கி, "என்னால் எல்லோரும் பிழைப்பதெப்படி?" என்று கேட்டான். ஜாம்பவான், "ஏ மாருதி! இமயமலைக்கு வடக்கே மருத்துமாமலையில், சல்லியகரணி, சந்தனகரணி, சஞ்சீவிகரணி என்கிற ஔஷதிகளிருக்கின்றன. அவைகளைக் கொண்டுவந்தால் எல்லோரும் பிழைப்பார்கள்" என்றான். உடனே மாருதி உம் என்று ஆகாயத்திற் கிளம்பி ஒரு பாய்ச்சலிலே அம்மலைக்குச் சென்று அம்மலையையே பெயர்த்து எடுத்துக்கொண்டு யுத்தகளம் வந்தான். அம்மலையிலுள்ள ஔஷதிகளின் காற்றுப் பட்டமாத்திரத்தில் ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரும் உயிர் பெற்று எழுந்தார்கள்.

9. மறுபடி யுத்தம் நடந்தது. இப்பொழுது ஸ்ரீராம பிரான் இராவணனை அவன் குலத்தோடு அழித்து அவன் தம்பியும் தன்னிடம் சரணமடைந்தவனுமாகிய விபீஷணனை இலங்கைக்கு அரசனுக்கிவிட்டு ஸீதாதேவியுடனும் தன் னோடு கூடவந்த எல்லோருடனும் வந்தவழியே அயோத் திக்குவந்து சேர்ந்தான். இங்கே ஸ்ரீராமச்சந்திரனுக்குப் பட்டாபிஷேகம் வெகு விமரிசையாக நடந்தது. பிறகு ஸ்ரீராமன் எல்லோரையும் பார்த்து அவரவர் தனக்குச் செய்த நன்றிகளைக்கூறி மரியாதையுடன் தக்க வெகுவதி யளித்து விடைகொடுத்து அவரவர் இருப்பிடத்திற்கு அனுப்பினன். அப்பொழுது மாருதியைப் பார்த்து, "நீர் செய்த உபகாரம் பெரிது! அதற்குப் பிரதி உபகாரம் நான் என்ன செய்யப்போகிறேன்? இதோ என் மார்பிலே அணிந்துக்கொண்டிருக்கிற வஜ்ரமணிஹாரத்தை உமக்குக் கொடுக்கிறேன்; நீர் அணிந்துகொள்ளும்" என்று சொல்லி அதைக் கொடுக்கையில், மாருதி தலைவணங்கி வாய்பொத்தி முன்தானையை மடக்கிக்கொண்டு ஒன்றும் பேசாமல் பய பக்தியுடன் நின்றான். ஸ்ரீராமச்சந்திரன் அது கண்டு மகிழ்ந்து "உமது அன்பே அன்பு" என்று மும்முறை கூறி அந்த ஆபரணத்தை அவன் கழுத்தில் அணிந்து, உடனே, தன் அருகிலிருந்த ஸீதையை கடைக்கண்ணால் பார்த் தான். ஸீதை தான் முழுமனதுடனும், பேரன்புடனும், மாருதியை வாழ்த்தித் தனக்கு ஸரஸ்வதிதேவி கொடுத்த முத்தாரத்தைக் கழற்றி அவனுக்குக் கொடுத்தாள். மாருதி தலைகுனிந்து இருகரங்களாலும் அதைப் பெற்றுக்கொண்டு ஸீதாதேவியை நமஸ்கரித்து விடைகொண்டான்.

10. எல்லோரும் மாருதியின் பராக்கிரமத்தையும் அவன் ஸ்ரீராமச்சந்திரனிடம் காட்டிய அன்பையும் புகழ்ந்து அவனை வாழ்த்தி "இவனே நல்ல அடிமை! இவனே புகழ் பெற்றவன்! இவனே தீவினை நீங்கிய தீரன்" என்று புகழ்ந்தனர். தேவர்களும் பூமாரிபொழிந்து அவனை வாழ்த்தினர்! தேவதுந்துபி முழங்கியது!

---

# விபீஷணன்

## நல்ல பக்தன்

### அத்தியாயம் 1.

#### விபீஷணனும் இராவணனும்.

விபீஷணன், ஸீதாதேவியைப் பஞ்சவடியிலிருந்து திருடிக்கொண்டு போன இராவணனுடைய தம்பி. இராவணனுக்குக் கும்பகர்ணன் என்கிற ஒரு தம்பியுமிருந்தான். இவர்கள் மூவரும் விஸ்ரவஸ் என்னும் ஒரு மகரிஷியினுடைய பிள்ளைகள். இவர்கள் மகரிஷியினுடைய பிள்ளைகளானலும் அரக்கர்களாகப் பிறந்தார்கள். ஆனல் மூவரும் வேதசாஸ்திரங்களை ஓதி உணர்ந்தனர். இப்படிப்பட்ட இவர்கள் மூவரும் தங்கட்கு வேண்டிய வரங்களைப் பெறுவதன் பொருட்டுப் பிரமதேவரைக் குறித்து நெடுங்காலம் தவம்புரிந்தார்கள். பிரமதேவர் இவர்களுடைய தவத்திற்கு இரங்கி ஒவ்வொருவருக்கும் தனித் தனியே தரிசனம் கொடுத்து அவரவர் விரும்பிய வரங்களைக் கொடுத்தார். இராவணனும் கும்பகர்ணனும் கெட்ட எண்ணங் கொண்டவர்களாயிருந்தார்கள். ஆகையால் அவர்கள் தங்கள் எண்ணத்திற்குத் தகுந்தவரங்களைப் பெற்றுக்கொண்டார்கள். விபீஷணன் நல்ல எண்ணமும் நல்ல குணமும் உடையவனயிருந்தமையால், உலகங்களையெல்லாம் காக்கும் கடவுளாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவினிடம் என்றும் மாருத பக்தி தனக்குண்டாக வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். பிறகு இராவணன், தன்னுடைய வல்லமையினல் அரக்கர்

களுக்கெல்லாம் அரசனாய் இலங்கையிலிருந்து அரசுபுரிந்து வந்தான். கும்பகர்ணன், விபீஷணன் இருவரும் அவனுடன் இருந்து வந்தார்கள். விபீஷணன் இராவணனுடைய ஆளுகையில் வெறுப்புக் கொண்டிருந்தான். அவனுடைய செய்கைகள் இவனுக்குப் பிடிப்பதில்லை. இருந்தாலும் தமையனென்கிற மரியாதைக்குக் கட்டுப்பட்டு அவனோடு பல கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருந்தான்.

2. இப்படியிருக்கையில், இராவணன் ஸ்ரீராமச் சந்திரனுடைய மனைவி ஸீதையைப் பஞ்சவடியிலிருந்து அபகரித்துக்கொண்டு வந்து அசோகவனத்தில் சிறைவைத்தான். இராவணன் ஸீதையை அபகரித்துக்கொண்டு போன செய்தி அறிந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் இராவணனோடு சண்டை செய்யச் சேனைகளோடு புறப்பட்டு வந்து, தூதர்கள் மூலமாக இராவணனுக்குச் செய்தி சொல்லி அனுப்பினார்கள். இராவணன் உடனே ஒரு சபைகூட்டித் தன்னைச் சேர்ந்தவர்களோடு ஆலோசனை செய்தான். எல்லோரும் அவனைத் தழுவியே பேசினார்கள். விபீஷணன், மரியாதையுடனெழுந்து, “அண்ணா, நீயே எனக்குத் தந்தை; நீயே தாய்; என்னுடைய சகல நன்மைகளுக்கும் ஆதாரமானவன் நீயே. ஆகையினால், நீ அடைதற்குரிய பெரிய பதவியை எங்கே இழந்துவிடப் போகின்றாயோ என்னும் பயத்தினாலும் நான் உன்னிடம் வைத்துள்ள அன்பினாலும் இப்போது சில வார்த்தைகள் சொல்லுகிறேன். அவை நியாயமாயினும் அநியாயமாயினும் சிறிது பொறுமையுடனிருந்து முழுவதுங் கேட்டுப் பின், என்மீது கோபிக்க விரும்பினால் கோபிக்கலாம்—

3. பதிவிரதைகளுக்குச் செய்யும் தீங்கு, செய்தவனைத் தான் அழிக்கும் என்பதில்லை. அவன் குலத்தை

யும் அது அழிக்கும். ஆகையினால் சிறைவைத்திருக்கும் ஸீதையை உரியவரிடம் சேர்த்து நல்லவனாதலே அறிவுடைமையாகும். ஸ்ரீராம லக்ஷ்மணர்களை வெல்ல உன்னால் முடியாது. ஸ்ரீராம லக்ஷ்மணர்களை நாம் நரர் என்று எண்ணி அலக்ஷியம் செய்வது கூடாது. அவர்கள் ஒப்புயர்வற்ற வீரர்கள். ஸ்ரீராமருடைய பெருமை அளவு கடந்தது. ஸ்ரீராமர் அநேக பெரியவர்களுடைய அநுக்ரஹம் பெற்றவர். அவர் பகை நமக்காகாது. அவர் மனைவியை விட்டுவிடுவதே நமக்கு நன்மையாகும்'' என்று கூறினான்.

4. இராவணன், கொடியவனாதலால் தம்பி சொல்லுவதில் நன்மை யுண்டென்பதைச் சிறிதும் கவனியாமல், பெரிய கோபங் கொண்டெழுந்து, "அடே, உன்னையல்லாமல் வேறு எவனாயினும் இவ்வார்த்தை சொல்லி யிருப்பானால் அவன் இந்நேரம் எமபட்டணத்திற்குப் போயிருப்பான்! அடே, உடன் பிறந்தேகொல்லும் வியாதி என்பதற்கிலக்காய் நீ இக்குலத்திற்குத் தோன்றி இருக்கின்றாய்! எப்படிப்பட்ட விஷயத்தையும் சிறிதும் அச்சமின்றி முடிக்கவல்ல வல்லமை விளங்கவேண்டிய உன்னிடம் இந்தக் கோழைக்குணமானது எப்படித் தோன்றியதோ அறியேன்! தேவர்களை யல்லாமல் தேவர்களுக்கெல்லாம் தேவராகிய மூவருக்கும் அஞ்சாத ஆண்மை படைத்த எனக்குத் தம்பியாகிய உன் மனம் இப்படிக் கலங்கியது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது! அந்த பயத்தை விட்டுவிடு" என்றான். விபீஷணன், வெகு பொறுமையுடன் அண்ணனுடைய திருவடி பணிந்து, "அண்ணா! நம்மினத்தவருள் ஒப்புயர்வில்லாத வல்லமையுடன் விளங்கிய ஹிரண்யன் மாயவனுடைய கோபத்திற்காளாய்ப் பட்டபாட்டை நாமறியோமா? ஆகையால் ஸீதையை விட்டு நம்மையும் நமது குலத்தையும் காப்பதே தகுதி'' என்றான்.

5. இராவணன், "அடே பயலே! நீ கெட்டாய்! எப்படி ஹிரண்யனைக் கொல்லப் பிரஹ்லாதன் ஏற்பட்டானோ அப்படி நீ எனக்குப் பகைவனாகிறாய்! இனி அரை நிமிஷமும் என் முன் நில்லாதே! எங்கேனும் ஓடிப்போ! போ! நின்றால் கொல்லுவேன்! இது ஸத்தியம்!" என்றான்.

6. விபீஷணன், "இவனுக் கினி நீதி சொல்வதிற் பயனுண்டாகாது. கேடுகாலம் இவனுக்குக் கிட்டி விட்டது. நமது பேச்சு இவனுக்குப் பிடிக்காது. நாம் இனி இங்கிருக்கப்படாது. இவனிடமிருந்து வீணே இவன் கையால் உயிர் துறப்பதென்றால் அது எடுத்த இந்தப் பிறவியின் பயனாகாது. நல்ல கதியை அடையும் வழியை நாடுவதே அறிவாகும்.—எண்ணிப்பார்த்தால், தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலிய இவர்களாலே துக்கமுண்டாகிறதே ஒழிய நன்மை யுண்டாவதாகத் தெரியவில்லை. இவர்களுக்கும் நமக்கும் ஒரு சம்பந்தத்தையும் காணேம். இவர்களுடைய சார்பு பொய்ச்சார்பாகிறது. அறிவுடையவர்கள் மெய்யான சார்பையே நாடுவார்கள். ஆகையால் நான் இந்த நிமிஷமே ஸ்ரீராமபிரானைச் சரணமடைந்து பிழைக்கின்றேன்" என்றெண்ணித் தன்னுடைய நண்பர் நால்வருடன் அங்கிருந்தபடியே கிளம்பி ஆகாயமார்க்கமாய் ஸ்ரீராமபிரானிருக்கும் இடத்திற்குப்போய் மேலே நின்றான்.

---

## அத்தியாயம் 2

### விபீஷணன் ஸ்ரீராமனைச் சரணமடைவது

இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரன் சுக்ரீவன், மாருதி முதலிய எல்லோருடனும் தென் சமுத்திரக் கரையிலிருக்கிறான். விபீஷணன் இப்படி வந்திருப்பதைக் கண்டதும் இவனை இன்னானென்றறியாத வானரவீரர்கள் பயந்தார்கள். பிறகு அவர்கள் அரக்கர்களென்று நிச்சயித்தார்கள்; உடனே பெரிய ஆரவாரத்துடன் மலைகளையும் மரங்களையும் பெயர்த்து எடுத்துக்கொண்டு "இந்தத் துஷ்டனை இப்போதே கொல்லுகிறோம்! உத்தரவிடுங்கள்" என்று தம் அரசனாகிய சுக்ரீவனைப் பார்த்துக் கேட்டார்கள்.

2. வானரர்கள் இப்படி ஆரவாரஞ் செய்யவே, விபீஷணன், "இப்பொழுதுதான் நாம் நமது வரலாறு தெரிவிக்கச் சமயம்" என்று கருதி, "கொடியவனாகிய இராவணனுக்கு நான் பல நியாயங்களை எடுத்துச் சொன்னேன். கொடிய நோய் மிகுந்து சாகக்கிடக்கிறவன் எப்படி மருந்தை ஏற்றுக்கொள்ள மாட்டானோ அப்படியே, காலனுக்கிரையாக இருக்கும் அவன் நான் சொல்லியவைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. என்னைத் தன்முன் நிற்காமல் ஓடிப்போகும்படி துரத்தினான். நான் என் மனைவி புத்திரர்கள் எல்லோரையும்விட்டு எல்லா உறவும் ஸ்ரீராமபிரானென்று தீர்மானித்து அவரைச் சரணமடைய வந்திருக்கிறேன். என்னை என் ஆண்டவனுக்குத் தெரிவியுங்கள்" என்று கூறி, "ஸ்ரீராமா சரணம்! ஸ்ரீராமா சரணம்!" என்று கூறினான்.

3. ஸ்ரீராமா சரணம் என்ற சொல் செவியிலே விழுந்ததும் ஸ்ரீராமபிரான் உயரநோக்கி யாரென்று கவனித்தான். அப்பொழுது சுக்ரீவன் ஓடிவந்து, விபீஷணனை

இன்னுமென்று கூறி "இவனை நம்புவது கூடாது. இவ நமக்கு அநுகூலனைப்போல் நம்மிடம் வந்து நமக்குள் பேதத்தை உண்டு பண்ணி உபத்திரவம் செய்வான். இரா க்ஷஸனாகையால், இவன் சமயோசிதமாக நடக்க வல்லவன். துஷ்டருக்கு உதவி செய்தால் அது செய்தவருக்கே ஆபத் தாய் முடியும்? இவன் ஏற்றுக்கொள்ளத் தக்கவன ன்" என்றான். மற்ற வானர வீரர்களும் விபீஷணன் ஏற்றுச் கொள்ளத் தகாதவனென்று ஸ்ரீராமபிரானுக்குச் சொன்ன கள். ஸ்ரீராமபிரான் மாருதியின் அபிப்பிராயத்தைக் கேட் டான்.

4. மாருதி, ஸ்ரீராமனை வணங்கி, "சுவாமி! சரண மென்று வந்து அடைந்தவன் எவனானாலும் அவனை அந்த நிமிஷமே ஆதரிப்பது தமது வம்ச வழக்கம். அப்படி யிருப்பதால் நானென்ன சொல்லப்போகின்றேன். ஆய்ந் தோய்ந்து பார்த்து ஒரு காரியத்தை முடிவு செய்ய வேண்டுமென்று வானரர்கள் சொன்னவை யாவும் சரியே யாம். ஆயினும் அடியேனுக்கு விபீஷணன் விஷயத்தில் மாறுபாடான எண்ணம் கிடையாது. இவன் தேவரீரிடம் வந்தது, தேவரீர் வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு அர சளித்த பரோபகாரத்தை எண்ணி நலம்பெறும் பொருட் டேயாம். இலங்கையானது சீர்கேடான அரசாட்சியை யுடையதாதலால் அது அழியுமென்பதை இவன் அறிவான். இவன் நல்ல பரிசுத்தன். இராவணன் என்னைக் கொல்லத் துணிந்தபோது இவனே தக்க நியாயங்கூறித் தடுத்தவன். இவன் தன்னுடைய அண்ணனை நல்லவழிக்குக் கொண்டு வரத் தன்னால் இயன்றவரையில் முயற்சி செய்தான். ஆகையால் இவன் வரவு நல்லவரவேயாகும். இவன் ஜாதியை மாத்திரம் கருதி இவனைத் துஷ்டனென விலக்குவது சரி யல்ல" என்று சொன்னான்.

5. ஸ்ரீராமன் இப்பொழுது தெளிவடைந்து, விபீஷணனைச் சேர்த்துக்கொள்வதில் விருப்பங்கொண்டான்; எல்லோரையும் நோக்கி, "இனி வேறு பேசுவதற்கில்லை. மாருதி ஆய்ந்து சொன்னபடியே செய்வோம். வெற்றி யுண்டானாலும் உண்டாகட்டும். இல்லையென்றால் தோல்வி யுண்டானாலும் உண்டாகட்டும்" என்று கூறினான். வானரர்கள் மயங்கினார்கள். ஸ்ரீராமன், "மாருதியைப்பற்றிச் சாதாரணமாய் நினைப்பதற்கில்லை. அவர் பேசியதில் தவறிருக்காது. அவர் எல்லா முணர்ந்த அறிஞர். ஆகையினால் அவர் அபிப்பிராயப்படி, விபீஷணனை ஏற்றுக்கொள்வதே செய்யத்தக்கது. நான் இவனைக் காப்பாற்றாமல் கைவிடின் என் பராக்ரமம் என்ன பயனுடையதாகும்? இவனை ஆதரியாமலிருப்பது எனக்கு அழகல்ல" என்று கூறினான். சுக்ரீவன், "சுவாமி! விபீஷணன் நீசன்! அவனை நம்புவது கூடாது" என்று பின்னும் சொன்னான்.

6. ஸ்ரீராமன், "என்னைச் சரணமடைந்தவன் எப்படிப் பட்டவனாயினும் நான் அவனை விலக்கேன்! அதனால் என்ன நேரிடினும் அஞ்சேன். "ராமா சரணம்" என்று அடைந்தவனுக்கு அபயம் கொடுத்து விட்டேன். ஆகையால் அவனை அழைத்துக்கொண்டு வருவீர்" என்று சுக்ரீவனுக்குச் சொன்னான்.

7. உடனே சுக்ரீவன், ஆகாயத்திலே கிளம்பி விபீஷணனிடம் போய், "ஐயா! நீர் பாக்யசாலி, சுவாமி உம்மை அழைத்துவருமாறு எனக்கு ஆஞ்ஞாபித்தார்" என்று கூறினான். விபீஷணன் இதைக்கேட்டதும் பரமானந்தமடைந்தான். அவன் உள்ளம்போல் உடலும் குளிர்ச்சி அடைந்தது. அவன் தேகம் சிலிர்த்தது.